# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



மனசுக்குள் மமதி!

KALKI • 07.06.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



'வாக்கிங்' வேணாம் ப்ரஷர் வரும்!



தலைநகர் தலைகுனிவ?

# சிறுநீர் கசிவு பிரச்னையா?

இன்னும் ஏன் தயக்கம்?

"நீங்கள் அணுக வேண்டிய சிறப்பு மருத்துவர்

## UROGYNECOLOGIST

இருமினாலோ,
தும்மினாலோ

சிறுநீர் கசிவு
ஏற்படுகிறதா?

"சிலிங் சிகிச்சை"

"வலியில்லாமல், இரத்தக் கசிவில்லாமல் ஒரே நாளில் வீடு திரும்புங்கள்". அமெரிக்காவில் UROGYNECOLOGY FELLOWSHIP பட்டம் முடித்த மருத்துவர்கள் உள்ள இந்தியாவில் முதல் ISO 9001:2000 Certified சிறப்பு மையம்

**இப்போது கோவையில்**

**பாலா மெடிக்கல் சென்டர்**
**அண்டு ஆஸ்பிட்டல்,**
901, திருச்சி ரோடு,
இராமநாதபுரம்,
கோயம்புத்தூர் 641 045.
0422-2323456, 2323333

தங்கள் பிரச்னையை மேற்படி மையத்திலுள்ள முறையான பயிற்சி பெற்ற நபரிடம் தொலைபேசியில் தெரிவித்து கவுன்சலிங் அல்லது ஆலோசனை பெறலாம்.
ஆலோசனைக்குக் கட்டணம் எதுவும் கிடையாது!




**GUNA ASSOCIATES IN UROGYNECOLOGY & RESEARCH FOR INCONTINENCE (GAURI)**

1, Crescent Park Street, T.Nagar, Chennai - 600 017. Ph : 24341055, 24322591
E-mail : gunasek@gmail.com Web : www.urogynecology.in

# கல்கி





கல்கி
தரம் நிரந்தரம்

07.06.2009


தலைநகர் தலைகுனிவு...08

நுகர்வு வேட்கை............20

வாக்கிங் வேணாம் ப்ரஷர் வரும்.......24

அடங்குவது காதலா?....74
- விவாத மேடை

அரைவேக்காட்டு அமைச்சரவை!......14
- தலையங்கம்




## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2009

| | |
|---|---|
| முதல் பரிசு | - ரூ.10,000/- |
| இரண்டாம் பரிசு | - ரூ.7,500/- |
| மூன்றாம் பரிசு | - ரூ.5,000/- |

மேலும் விவரங்களுக்கு சென்ற வார கல்கி இதழைப் பார்க்கவும். அல்லது அடுத்த வாரம் வரை காத்திருக்கவும்.

- ஆசிரியர்

# ராஜா மனசுல வாலி!

சினி சிப்ஸ்

★ 'சிவா மனசுல சக்தி' படத்தின் வெற்றியைத் தொடர்ந்து விகடன் டாக்கீஸ்'க்காக பா.சீனிவாசன் தயாரிக்கும் இரண்டாவது படம்தான் 'வால்மீகி'.

★ பிரமாண்ட இயக்குநரான ஷங்கரின் உதவியாளர் அனந்த நாராயணன் படத்தின் அறிமுக இயக்குநர். சென்னை திரைப்படக் கல்லூரியில் பிலிம் பிராஸஸிங் படித்தவர்.

★ படத்தின் மொத்தப் பாடல்களையும் எழுதியிருப்பவர் வாலி. படத்தில் பாடல் எழுதாத அனைத்து முக்கியக் கவிஞர்களையும் மேடையேற்றி ஒவ்வொரு கவிஞரையும் ஒரு பாடலைத் தேர்ந்தெடுத்துப் பேச வைத்துப் பெருமைப்படுத்தியிருந்தார் தயாரிப்பாளர். நிகழ்ச்சிகளில் அதிகம் கலந்துகொள்ளாத பாடலாசிரியை தாமரை இதில் இடம் பிடித்திருந்தார்.

★ 'என்னடா பாண்டி என்ன செய்ய போறே...' பாடலை முதன்முறையாக சென்னை லோக்கல் தமிழில் பாடியிருக்கிறார் இசைஞானி. படத்தின் பாடலைக் கேட்டுவிட்டு விகடன் குடும்பம் கண்ணீர் விட்டு அழுததாம். இயக்குநர் குறிப்பிடாத மேலும்



இரண்டு இடங்களுக்கு டியூன்போட்டுப் பாடியிருக்கிறார் இளையராஜா.

★ மலையாள உலகின் நம்பிக்கைக்குரிய இயக்குநரான சத்யம் நந்திக்காட்டின் ஆஸ்தான ஒளிப்பதிவாளரான என்.அழகப்பன் தமிழில் முப்பது வருடங்களுக்குப் பிறகு மீண்டும் அறிமுகமாகிறார். கேமரா கவிஞரான பி.சி.ஸ்ரீராமின் வகுப்புத் தோழனாக இருந்தவர் இவர். கதைக்கு முக்கியத்துவம் கொடுத்தே படத்துக்கு ஒளிப்பதிவு செய்வாராம்.

★ படத்தில் இரண்டு ஹீரோயின்கள். பரதம், மோகினியாட்டம் கற்று வைத்திருக்கிறார் தேவிகா. மற்றொருவர் மீரா நந்தன். 'முல்லா' படத்தின் நாயகி.

★ 'கனகா' கதாபாத்திரத்தில் மீரா நந்தன் பூ விற்கும் பெண்ணாக வருகிறார், கதையின் நாயகனாக அகிலுக்கு பிக்பாக்கெட் வேடம்.

★ காவல் துறை அதிகாரிகளையும், பிக்பாக்கெட் ஆசாமிகளையும் நேரில் சந்தித்து விசாரித்து கதாபாத்திரத்தை அமைத்திருக்கிறார் இயக்குநர்.

★ நேர்மையையும், நேர்த்தியையும் சேர்த்தே டைரக்ஷனையும் கற்றுக்கொண்டிருக்கிறார் தமது குருவான இயக்குநர் ஷங்கரிடமிருந்து சிஷ்யரான அனந்த நாராயணன்.

**- கிராபியென் ப்ளாக்**




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : **லஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**

தொலைபேசி :
**044 - 4343 8888 (30 lines)**

தொலைநகல் : **044 - 4343 8899**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**

வெளிநாடு (விமானத்தபால்) :
**ஒரு வருடம் : ரூ.3,800/-**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# கான்ஃபிடன்ட் கிருஷ்ணனாக...

ஒருவரின் உடல்மொழியை வைத்தே அவர் தன்னம்பிக்கையுள்ளவரா, தைரிய மற்றவரா, பய பீதியிலிருப்பவரா என்று ஈஸியாகச் சொல்லிவிட முடியும். பாடி லாங்வேஜ் என்று சொல்லப்படும் இந்த உடல்மொழிக்கு பேச்சே தேவையில்லை. கண்கள், கை கால்கள், தலைமுடி, நிறம்... போன்றவையே ஒரு மனிதனின் உள்ள வெளிப்பாட்டை, பளிச்செனக் கண்ணாடி போல காட்டி விடும்.

நம் உடல்மொழி எதிரேயிருக்கும் நப ருக்குத் தகுந்தாற்போல் மாறும் அதி சயத்தை நீங்களே டெஸ்ட் செய்து பார்க்க லாம். உங்கள் தோழியுடன் ஃப்ரீயாக அரட்டை அடித்துக் கொண்டிருக்கும்போது எதிரே பாஸ் வந்து நின்றால் வெளிறிப் போகிறீர்களா இல்லையா? ஜாலியாக சினிமா பார்க்கும்போது (அதுவும் காலேஜ் கட் அடித்து விட்டு) பக்கத்து சீட்டில் அப்பாவைப் பார்த்தால் உங்கள் ரியாக்ஷன் என்ன? உரிய பாடி லாங்வேஜினால் பர்ஸனாலிட்டியை பளிச்சிடச் செய்வது சாத்தியமே. நாம் எப்படி உட்காருகிறோம், எப்படி நடக்கிறோம், பேசும் போது கை கால்களை ஓவராக வீசி வீசிப் பேசு கிறோமா என ஆராயவும். கண்ணாடிக் கெதிரே நின்று பிராக்டிஸ் செய்யவும். கண்ணை மூடிக் கொண்டு விஷுவலைஸ் செய்யவும்.

உங்களுக்கென ரோல் மாடல்களும் இருப்பார்களே! அவர்களில் பிடித்தமான நபரை செலக்ட் செய்து அவரைப் போலவே நின்று, நடந்து, சிரித்துப் பார்க்கவும். மெஸ்மரைஸ் பண்ணும் விஷயம் அவர் களிடம் இருப்பது ஏன் உங் களிடமில்லை எனச் சிந் திக்கவும். ஏதேனும் ஒரு வரை அப்பட்டமாகக் காப்பியடிப்பதற்கு முன் னால் மிக்ஸ் அண்ட் மாட்ச் டெக்னிக்கைக் கையாளவும்.

புதிய பாடி லாங்வேஜினால் எனர்ஜி, குஷி எல் லாம் அதிகமாகி உற்சாக லக்ஷ்மி யாக வளைய வரு வீர்கள். அல்லது கான்ஃபிடன்ட் கிருஷ்ணனாக ஃபீல் பண்ணுவீர்கள்.

நாம் பேசுவதை ஆடியன்ஸ் வெறும் ஏழு சதவிகிதமே கேட்கிறார்களாம். பின்னே வேறெதைக் கவனிக்கிறார்கள்? பாடி லாங்வேஜ் எப்படியிருக்கிறது என் பதைத்தான் அதிகமாக நோட்டம் விடு கிறார்கள் என்கிறது ஒரு வெளிநாட்டு ஆய்வு! இனி நீங்களும் மற்றவர்களுடன் பேசும்போது பாடி லாங்வேஜினால் பேச முயற்சிக்கவும்... வெற்றிதான்!

**★ ஐ கான்டாக்ட் மிக முக்கியம். பிறர் உங்களிடம் பேசும்போது அவர்களின் கண் களைப் பாருங்கள். இது ஒரு நம்பிக்கை யைக் கொடுக்கும் சிக்னல். அதற்காக வெறிக்க வெறிக்கப் பார்க்கக் கூடாது. நான் உங்கள் பேச்சைக் கவனமாகக் கேட்**

கிறேன்/மதிக்கிறேன் என்பதை உங்கள் கண்கள் சொல்லிவிடும். ஆபீஸில், பிஸி னஸ் மீட்டிங்கில் பிரயோகித்துப் பார்க்கவும்.

பார்த்தாலும் சிரிக்கக் கூடாது. சிரிப்பு தவழும் முகம் பாஸிடிவ்வான தோற்றத்தைக் கொடுக்கும். (சாலமன் பாப்பையாவின் வெற்றிக்குக் காரணங்களுள் அவர் சிரிப்பும் ஒன்று)

★ விழிகள் நிலம் நோக்கி நடந்தாள் சீதை... என்பது அந்தக் கால கட்டத்துக்குப் பொருத்தமான ஒரு வர்ணனை. இது இப்போது எடுபடாது. யாரேனும் பேசும்போதோ அல்லது நீங்கள் யாருடனும் பேசும்போதோ தரையைப் பார்த்துக் கொண்டிருந்தீர்களானால் 'இன்செக்யூர் பர்ஸன்'-ஸ்திரமற்றவர் என்ற பிரமையை ஏற்படுத்தும். ஸோ, தலை நிமிர்ந்து நிற்கவும்.

நீங்களும் மற்றவர்களுடன் பேசும்போது பாடி லாங்வேஜினால் பேச முயற்சிக்கவும்

## உடையழகு... நடையழகு...

(வீட்டில் மருமகளும் மாமியாரும் பேசும்போது கண்களால் கேட்கவும்) சூப்பர் ரிஸல்ட்.

★ போஸ்சர் சரியாக இருக்க வேண்டும். கூன் போடாமல் ஜம்மென்று உட்கார்ந்து, நின்று பேசும் போது, அதுவே ஒரு தன்னம்பிக்கையைக் கொடுக்கும். ரிலாக்ஸ்டாக இருக்கவும். நெர்வஸாக இருந்தால் உங்கள் தோள்பட்டைகளே நடுங்கிக் காண்பித்து விடும்.

★ ஸ்மைல்... ஆமாங்க மிக பவர்ஃபுல்லான பாடி லாங்வேஜ். அதற்காக எப்பப்

★ முகத்தை சும்மா தொட்டுக் கொண்டே இருக்கக் கூடாது. நெர்வஸ் என்பதைக் காட்டும் முத்திரை!

(உடல்மொழி தொடரும்)

- லதா சேகர்

"பத்தே பத்து நாள்தாங்க எங்களுக்கு மொத்தமா லீவு! என்ன செய்ய தேர்தல் தேர்வுன்னு மாறி மாறி ஏகப்பட்ட லீவு விட்டு எங்க எக்ஸாம்லை எல்லாம் ஒரேயடியா தள்ளி வெச்சுட்டாங்க. ஆனாலும் சம்மரை விட்ற மாட்டோம். ஆறு படங்களை ஒரேடியா ஆறு .நாட்கள் விடாம பார்க்கப்போறோம்.. அப்புறம் க்வீன்ஸ் லேண்ட் போகப் போறோம்... இப்படி ஏகப்பட்ட ப்ளான்கள் லைன்ல நிக்குது... ஹாங்... முக்கியமான மேட்டரை மறந்துட்டோமே... காலேஜுக்குப் புதுசா வர்ற ஜூனியர்ஸை வரவேற்க freshers day எப்படி கொண்டாடறது, எவ்வளவு பட்ஜெட்ல செலவழிக்கறதுன்னு கூட இப்பவே ப்ளான் பண்ணி வெச்சிடுவோம்..." என இரண்டாம் ஆண்டு பி.காம் படிக்கும் மாணவிகளான ரோஷினி, ஷ்யாமளா, அவர்களது வகுப்புத் தோழர்களான நவீன் பாலாஜி மற்றும் பிரபாகரன் ஆகியோர் டிஸ்கஸ் செய்தபடி இருந்தனர்.

"கள்ளக்குறிச்சிலேர்ந்து இங்க படிக்கறதுக்காக வந்தவன் நான். ஆனா சரியா படிக்கல... போன வாரம் அப்படிதாங்க linguistics (மொழியில்) பேப்பருக்கு யாருமே... யாருமேன்னா எங்க அரியர்ஸ் சங்கத்தைச் சேர்ந்த மெம்பருங்க எட்டு பேருமே சரியாவே படிக்கல. சரி, எக்ஸாம் எழுதினாலும் எப்படியும் அரியர்ஸ்தான் வரப் போகுதுங்கற தைரியத்துல பேசாம கிளம்பி 'பசங்க' படம் பார்க்கப் போய்ட்டோம்... அதனால இன்னொரு அரியர் பேப்பர் சேர்ந்துடுச்சு" என்றார் மகேஷ்.

"எங்களை எல்லாம் விடுங்க... இதோ நிக்கறாரு பாருங்க தலைவர். அவரு 23 பேப்பர் அரியர்ஸ் வெச்சிருக்காரு. ஒரு மாசமா ரெண்டு வேளையும் வந்து எக்ஸாம் எழுதிக்கிட்டு இருக்காரு இவரு... எங்க வெற்றி சரித்திரத்தைக் கேட்டீங்கன்னா அசந்து போய்டுவீங்க... எது எப்படியோ இந்தப் புல்வெளில உட்கார்ந்துக்கிட்டு க்ரூப் ஸ்டடி பண்ணிக்கிட்டு எப்படியும் அரியர்ஸ் எல்லாத்தையும் க்ளியர் பண்ணிட்டு, அப்புறம் கொலம்பஸோட லீவு கொண்டாடக் கிளம்பிட வேண்டியது தான். படிப்புல நாங்க

**நீட்டலும் (ரொம்ப நல்லா படிப்பது) மழித்தலும் (அரியர்ஸ் வைப்பது) வேணாம்னு வள்ளுவர் சும்மாவா சொல்லியிருக்காரு?**



# 'ஆல் இன் ஆல்' அரியர்ஸ்!

கோட்டை விட்றோம்னு மட்டும் நினைச்சுடாதீங்க. நாங்க படிப்புல திருப்பித் திருப்பி கோட்டை கட்டிக்கிட்டு இருக்கோம். எங்களுக்குப் படிப்பு மேல அவ்வளவு இன்ட்ரஸ்ட்''ன்னு ஜாலியாகக் கலாய்த்தார் ஒருவர்.

''பத்து பேப்பர் அரியர்ஸ் வெச்சிருக்கேனே. எல்லாத்தையும் இந்த வருஷம் நான் நிச்சயம் க்ளியர் பண்ணியே ஆகணும். இதுதான் கடைசி வருஷம். இதுக்கு மேலேயும் இதே காலேஜ்ல உட்காரணும்னா முடியாது. அரியர்ஸ்க்காக எல்லாம் நான் கவலைப்படல...'' என ஜாலியாகப் பேசினார், மூன்றாம் ஆண்டு ஆங்கில இலக்கியம் படிக்கும் மாணவர் ஸ்டீபன்.

''எனக்கு சுத்தமா ஒரு பேப்பரும் அரியர்ஸ் இல்லை. நீட்டலும் (ரொம்ப நல்லா படிப்பது) மழித்தலும் (அரியர்ஸ் வைப்பது) வேணாம்னு வள்ளுவர் சும்மா சொல்லியிருக்கிறாரு. இப்ப இவங்களுக்கு அதனாலதான் கோச்சுக்காம கோச்சிங் கொடுத்துக்கிட்டு இருக்கேன்'' என்கிறார் கோச் வெங்கடேஷ்.

'ஆல் த பெஸ்ட்' சொல்லிவிட்டுக் கிளம்பினோம் நாம்.

– நளினி சம்பத்குமார்

# பலத்தைக் காட்டும்

"**நா**சிக் நோட்டடிக்கும் அச்சகத்தைக் கொடுத்தால் தி.மு.க. திருப்தி அடையுமா?'' என்று நக்கலாகக் கேட்டார் பிரபல தெலுங்கு தினசரியின் தில்லி தலைமை நிருபர்!

''தி.மு.க. இப்போது நடந்து கொள்ளும் முறையைப் பார்க்கும்போது, வெற்றியின் மகத்துவம் பின்னுக்குத் தள்ளப்பட்டு விட்டது! தமிழர்களுக்கு இப்படியொரு தலைகுனிவை அவர்கள் ஏற்படுத்தியிருக்கக் கூடாது'' - வருத்தப்பட்டார் தமிழக காங்கிரஸ் தலைவர் ஒருவர்.

தலைநகரில் நாம் சந்தித்த அதிகாரிகள், பத்திரிகையாளர்கள், மற்ற மாநில காங்கிரஸ் தலைவர்கள் ஆகியோரும் அமைச்சரவை விவகாரத்தில் தி.மு.க. நடந்து கொண்ட முறையை, பச்சை மிளகாயாய் விமர்சித்தார்கள்!

தி.மு.க. முறுக்கிக் கொண்டு நின்ற நிலையில், தமிழ்ப் பத்திரிகையாளர்கள் சிலருடன் பிரணாப் முகர்ஜியைச் சந்தித்தோம். ''என்ன நடக்கிறது தமிழ்நாட்டில்?'' என்று கிண்டலாக அவர் கேட்ட கேள்விக்குள் ஆயிரம் அர்த்தங்கள் பொதிந்திருப்பதைப் புரிந்துகொள்ள முடிந்தது.

**கா**ங்கிரஸ் இருநூறுக்கும் மேற்பட்ட இடங்களில் தனித்து வெற்றி பெற்றவுடனேயே, 'இனி கூட்டணிக் கட்சிகள் தங்கள் இஷ்டத்துக்கு காங்கிரஸை வளைக்க முடியாது' என்ற பேச்சு துவங்கியது. அமைச்சரவை குறித்து விவாதித்த காங்கிரஸ் உயர்நிலைக் குழு, ஒரு முடிவை எடுத்தது. கூட்டணிக் கட்சிகள் ஒன்பது இடங்கள் வைத்திருந்தால் ஒரு காபினட் மற்றும் ஒரு ராஜாங்க அமைச்சர் பதவி கொடுப்பது. அடிப்படை கட்டுமானம், கிராமப்புற வளர்ச்சி ஆகியவை தொடர்பான துறைகளை காங்கிரஸே கைவசம் வைத்துக் கொள்வது. இதன் பிறகு வீசிய புயல் குறித்து, கட்சி வட்டாரங்களில் நாம் சேகரித்த செய்திகள் இதோ:

2004ல் பதினைந்து இடங்களைப் பெற்றிருந்த தி.மு.க. மூன்று காபினட் அமைச்சர்களையும் ஐந்து ராஜாங்க அமைச்சர்களையும் பெற்றது. இந்த முறை இரண்டையும் சேர்த்து ஒன்பது அமைச்சர்களையும் கேட்க வேண்டும் என்பது தி.மு.க.வின் விருப்பமாக இருந்தது. பாலு, தயாநிதி, ராஜா, கனிமொழி ஆகியோருக்கு காபினட் பொறுப்பு கொடுக்கப்பட வேண்டும் என்பது கலைஞரின் நோக்கம். காங்கிரஸின் ஃபார்முலா கலைஞரைக் கலவரப்படுத்திவிட்டது. 2004ல் சென்னை



"என்னதான் நடக்குது தமிழ்நாட்டுல?"

# நேரம் வரும்!

## -தலைநகர் தகித்த தினங்கள்

தலைநகர் தலைகுனிவு?

யிலிருந்து வந்தபோது தமிழ்நாடு இல்லத் துக்கு வந்து பார்த்த சோனியாவை, இந்த முறை, உடல்நலமில்லாத நிலையிலும் கலைஞரே நேரில் சென்று சந்திக்க வேண்டியிருந்ததையும் தி.மு.க. தலைகள் கசப்போடு சொல்லிக் கொண்டன.

காங்கிரஸுடன் முரண்படுவதை டி.ஆர்.பாலு அறிவிக்க, 'வெளியிலிருந்தே ஆதரிக்கிறோம்' என்று கலைஞர் முடி வெடுக்க, சென்னை வந்துவிட்டாலும் சமரச முயற்சிகள் நாடகம் போல் தொடர்ந் ததும் தெரிந்ததே!

தமது எதிர்காலத் தலைமுறைகளையும் மனத்தில் வைத்து, அமைச்சராக இருந்த பாலுவைக் கழற்றிவிட வேண்டுமென்று அழகிரி வலியுறுத்தியதாகத் தெரிகிறது. கிட்டத்தட்ட குடும்ப உறுப்பினர்களுக்குச் சமமாக ராஜாவின் பெயர் மட்டும் அடி பட்டதில் உடன்பிறப்புகளுக்கே படு ஆச்சர்யம். இடையில், ''பாலுவையும், ராஜாவையும் பிரதமர் மீண்டும் அமைச் சரவையில் சேர்க்க விரும்பவில்லை'' என்ற செய்தி தி.மு.க. முக்கியப் புள்ளி ஒருவராலேயே மீடியாவில் கிளப்பிவிடப் பட்டது என்பது தில்லியில் பேச்சு.

தி.மு.க. அதிக அமைச்சர் பதவிகள் கேட்பதைத் தடுக்க, ''உங்களை விட ஓர் இடம் மம்தா அதிகமாகக் கேட்கிறார். எனவே ஃபார்முலாவைக் கண்டிப்பாக அமுல்படுத்த வேண்டிய நிலை'' என்று தி.மு.க.வுக்குப் பதில் சொல்லப்பட்டது.

''அதிக எண்ணிக்கையில் அமைச்சர் கள், பசையுள்ள இலாகாக்கள் என்று இரட்டைத் தாக்குதல் தி.மு.க.வால் நடத் தப்பட்டது. ஆனால், சேது சமுத்திர விவகாரத்தை பாலு கையாண்ட விதத்தில் காங்கிரஸ் தலைமைக்கு அதிருப்தி'' என்றார் உள்வட்டத்தில் இருக்கும் சீனியர் அதிகாரி ஒருவர். ''ஸ்பெக்ட்ரம் தொடர் பாக பாராளுமன்றக் குழு அறிக்கை தயாராக இருக்கிற கட்டத்தில், ராஜாவை மீண்டும் அவ்விலாகாவில் அமர்த்த விரும்பவில்லை. சென்ற முறை ராஜாங்க அமைச்சர்களாக இருந்த சுப்புலட்சுமி, ரகுபதி, பழநி மாணிக்கம், வெங்கடபதி, ராதிகா செல்வி ஆகியோர் செயல்பாடு சொல்லும்படி இல்லை. அதிலும் பழநி மாணிக்கம் கஸ்டம்ஸ் இலாகா அதிகாரி களைச் சகட்டுமேனிக்கு மாற்றியதில் கெட்ட பெயர். புதியவர்களை அமைச்சர் களாகப் போடுவது தி.மு.க.வுக்கு இமேஜைக் கூட்டும் என்று காங்கிரஸ்



* டி.ஆர். பாலு

* கனிமொழி

தலைவர்கள் கருதினார்கள். தயாநிதியை நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்றும் விரும்பினார்கள்'' என்றார் அவர்.

**க**னிமொழி இப்போது போட்டியிலிருந்து விலகிவிட்டாலும் சரியான சந்தர்ப்பத்தில் தனி அதிகாரம் பெற்ற ராஜாங்க அமைச்சராக அவர் வரும் வாய்ப்பு இருக்கிறது என்றும் சொல்லப்படுகிறது.

''இனி தில்லியில் அண்ணன்தான் தி.மு.க.வின் குரல்'' என்று சொல்கிறார் தில்லி வந்திருக்கும் மதுரை நகர கழகப் பிரமுகர். அமைச்சராவதற்கு முன்னரே அழகிரிக்கு தமிழ்நாடு இல்லத்தில் அளிக்கப்பட்ட 'சிவப்புக் கம்பள' வரவேற்பு அதை உறுதிப்படுத்தியது.

குடும்ப அரசியலில் தாம் கொஞ்சம் அடக்கி வைக்கப்பட்டது குறித்தும், மிகச் சாதாரணமான துறை கிடைத்தது குறித்தும் தயாநிதி கவலைப்படவில்லையாம். அவர், 'நாளை நமதே' என்று நம்பிக்கையுடன் இருப்பதாக அவருக்கு நெருக்கமானவர்கள் சொல்கிறார்கள்.

**ஃபா**ர்முலாவை மீறி தி.மு.க. 'கவனிக்கப்பட்டதில்' தேசியவாத காங்கிரஸும் திரிணாமுல் காங்கிரஸும் பதற்றப்பட்டுப் போயிருக்கின்றன.

தேசியவாத காங்கிரஸைச் சேர்ந்த பிரஃபுல் பட்டேலுக்கு 'கனமான' விமானப் போக்குவரத்துத் துறை மீண்டும் தரப்பட்டுள்ள நிலையில், ''தி.மு.க.வும் விட்டதைப் பிடிக்கப் போராடும்'' என்கிறார்கள். இந்த வகையில், தொலைத் தொடர்புத் துறை, தகவல் தொழில்நுட்பத்துடன் ராஜாவுக்கே கொடுக்கப்படுமாம். கப்பல் மற்றும் தரைப் போக்குவரத்தை தி.மு.க. கைப்பற்றும் நாள் அதிக தூரத்தில் இல்லையாம். இப்போதைய நிலையில் சற்று அடக்கி வாசித்துவிட்டு, சமயம் வரும்போது தங்கள் சக்தியைக் காண்பிக்க தி.மு.க. முடிவு செய்திருப்பதாகச் சொல்லப்படுகிறது.

''**தி**ல்லி அரசியலில் திடீர் சுனாமிகளும், அலைக்கழிக்கும் புயல்களும் சகஜம்'' என்கிறார் தி.மு.க.வின் பாராளுமன்ற உறுப்பினர் ஒருவர். ''மகாராஷ்டிர சட்டமன்றத் தேர்தலையொட்டி தேசியவாத காங்கிரஸுக்கும், காங்கிரஸுக்கும் மோதல் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. அதே போல் மம்தாவை உறுதியான தோழியாகச் சொல்ல முடியாது. நாங்கள் அமைச்சர்கள், இலாகாக்கள் விவகாரத்தில் கொஞ்சம் கெடுபிடி காட்டினாலும் ஐந்து வருடம் உறுதியாக உடனிருப்போம் என்பது கடந்த கால வரலாறு. எனவே, எங்கள் 'பலத்தை'க் காட்டும் நேரம் வரும்!'' என்றும் ஆருடம் சொல்கிறார் அந்த எம்.பி.!

– ப்ரியன்



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம், சென்னை - 63. போன் : 22760612, 22762299
City Office No.7, முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்.
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 20 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற, மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. 1,000/- |
| • மதிய உணவு | ரூ. 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் /வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.



# கேமராவுக்குத் தீனி வேணும்!

சித்தார்த் 'குங்குமப்பூவும் கொஞ்சும் புறாவும்' படத்தில் அழகான கடற்கரையை யும் யதார்த்தமான காதலையும் அற்புத மாக கேமராவில் பதிவு செய்த ஒளிப் பதிவாளர். சித்தார்த்தின் ஒளிப்பதிவைப் போலவே அவரது பேச்சும் இளமையாக வும் இயல்பாகவும் இருந்தது. அதி லிருந்து...

''குங்குமப்பூவும், கொஞ்சும் புறாவும் எனது நான்காவது படம். டைரக்டர் ராஜ் மோகன் ஸ்க்ரிப்ட்டைச் சொல்லும்போதே என் கேமராவுக்குத் தீனி போட நிறைய விஷயங்கள் இருக்குன்னு தெரிஞ்சுக்கிட் டேன். பரபரப்பான மக்கள் கூடும் இடங் களில்கூட ஷூட்டிங் நடக்கிறது என்பது தெரியாமல் இருக்க ஹேண்டி கேமரா, ஹிடன் கேமராக்களை பயன்படுத் தினேன். இதுபோன்ற நுட்பமான விஷ யங்கள்கூட படத்தின் காட்சிகள் சிறப் பாகப் பேசப்படுவதற்குக் காரணமாக இருக்கலாம்.

நான் சென்னை அடையாறு திரைப் படக்கல்லூரியில் டி.எப்.டி. முடித்த பிறகு, பாலிவுட்டில் கோவிந்த் நிக்கலானி, அனில் மேத்தா போன்றவர்களிடம் கேமரா அசிஸ்டெண்டாகப் பணியாற்றி னேன். ஸ்க்ரிப்ட் ரீதியாக புதிய விஷயங் களை பாலிவுட்டில் முயற்சி செய்கிறார் கள். இருந்தாலும் தொழில்நுட்ப ரீதியாக பாலிவுட்காரர்கள் நம்மை நம்பி இருக் கிறார்கள். பாலிவுட்டை ஒப்பிடும்போது வித்தியாசமான, கதையம்சம் கொண்ட படங்கள் தமிழ் இண்டஸ்ட்ரியில் குறைவுதான். மும்பை இண்டஸ்ட்ரியின் மார்க்கெட் பெரிது என்பதால் அவர்களால் செய்ய முடிகிறது.

டைரக்டர் என்னிடம் ஸ்க்ரிப்ட் சொல் லும்போது ஏதாவது ஒரு விதத்தில் என்னைப் பாதிக்கவேண்டும். இந்த ஸ்க்ரிப்ட்டுக்கு நான்தான் ஒளிப்பதிவு செய்ய வேண்டும் என்ற எண்ணம் எனக்கு வரவேண்டும். அப்போதுதான் அப் படத்தை ஒப்புக்கொள்வேன்.

டெக்னாலஜியோ அல்லது கேமரா உத்திகளோ நல்ல திரைக்கதைக்கு மாற் றாக இருக்க முடியாது. சிறந்த ஒளிப்பதிவு நல்ல திரைக்கதைக்கு இன்னும் மெரு கூட்டும்.

அதைவிட ஒளிப்பதிவு இலக்கணம், எனக்கு என்று ஒரு ஸ்டைல் இப்படியெல்லாம் பெயரிட்டு என் திறமையைச் சுருக்கிக்கொள்ள விருப்பமில்லை.

எனது தாத்தா வேப்பத்தூர் கிட்டு, பல படங்களுக்கு திரைக்கதை வசனம் எழுதியவர். எனது அப்பா ராம்சேயும் அம்மா நளினியும் தூர்தர்ஷனில் பணியாற்றியவர்கள். நாங்கள் இரண்டு தலைமுறையாக மீடியா குடும்பம் என்பதால், சினிமா பற்றிய புரிதலுக்கும் சினிமா பற்றி விவாதிப்பதற்கும் நிறைய வசதியாக இருக்கிறது.

பதின்மூன்று வருஷத்துக்கு முன்னால் என்று நினைக்கிறேன். மும்பையிலிருந்து புனே நெடுஞ்சாலையில் பயணித்துக் கொண்டிருந்தபோது தாபாவில் டீ சாப்பிட இறங்கினேன். அந்த டீக்கடையில் வேலை பார்க்கும் இரண்டு சிறுவர்கள் அந்த ஏழ்மையான சூழ்நிலையிலும் மகிழ்ச்சியாக விளையாடிக் கொண்டிருந்தனர். புறச் சூழல் எதையும் மனத்துக்குள் கொண்டு போகாமல் தங்களுக்குக் கிடைத்த வாழ்வு நிறைவானது என்பதைப்போன்று அவர்களின் செயல் இருந்தது. கிட்டத்தட்ட என்னுடைய சிந்தனையும் இதுதான். உடனே என்னுடைய ஸ்டில் கேமராவை எடுத்து அச்சிறுவர்களைப் படம் பிடித்தேன். உணர்வுகளின் யதார்த்தத்தைப் பதிவு செய்தேன். அதுதான் நான் இன்னமும் ரசிக்கிற படம்.''

**- ராகவ்குமார்**



**டெக்னாலஜியோ அல்லது கேமரா உத்திகளோ நல்ல திரைக்கதைக்கு மாற்றாக இருக்கமுடியாது.**



# கல்கி




2009 ஜூன் 7
விரோதி வைகாசி 24
மலர் : 67
இதழ் : 45


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## அரைவேக்காட்டு அமைச்சரவை!

**பி**ரதமரை நம்பி நாட்டையே அவர் பொறுப்பில் ஒப்படைக்கும் போது, அவர் வெற்றிக் கூட்டணியின் பல்வேறு தரப்பினருக்கும் நியாயமாக நடந்து கொள்வார் என்று நம்ப வேண்டும். பல்வேறு கட்சிகளுக்கு அமைச்சரவையில் பிரதிநிதித்துவம் தரும் பொறுப்பை அவரிடமே விட வேண்டும்.

ஆனால், இன்று, நம் நாட்டில் அமைச்சரவையில் இடம்பெறுவதை அடிப்படை உரிமை போல் கருதி அரசியல்வாதிகள் பேரம் பேசி வருகின்றனர். இது தலைகுனிவு மட்டுமல்ல; ஜனநாயக நல்மரபுகளுக்கு விளைந்துள்ள அபாயமும்கூட.

பிரதமர் தமது அமைச்சரவையைத் தேர்வு செய்யும் முழு உரிமை பெற்றவர் என்பது ஜனநாயக மரபு. ஆனால் மன்மோகன் சிங்கின் இந்த உரிமையை யாரும் மதித்து நடக்கவில்லை. சென்ற 2004 தேர்தலுக்குப் பிறகு, மன்மோகன் சிங்குக்கு மிக அதிக அழுத்தம் கொடுத்த தமிழக முதல்வர் கருணாநிதி, இம்முறை தமது குடும்பத்தினருக்குப் பதவி கேட்க டெல்லியில் முகாமிட்டதும், கேட்டது கிடைக்காதபோது, "வெளியிலிருந்து ஆதரவு" என்று சிறு பிள்ளைத்தனமாக முடிவெடுத்ததும், 'பேரம் படிந்த பின்' அந்த முடிவை வாபஸ் பெற்றதும் சுயநலம் மிக்க குடும்ப அரசியலின் அவல உச்சம்!

சோனியா காந்தி பிரதமரின் முடிவுகளில் தலையிடுவதும், அவரிடம் பல்வேறு கட்சியினர் அழுத்தம் கொடுக்க, ஒவ்வொரு முறையும் அவர் பிரதமர் இல்லத்துக்குச் சென்று பேச்சு வார்த்தை நடத்துவதும் அதன் பிறகு அமைச்சர் பட்டியல் மாற்றங்களுக்கு உள்ளாவதும்




அச்சமூட்டும் அறிகுறிகள். இந்த ஆட்சியில் கட்சித் தலைமையின் தலையீடு தொடரப் போவதையே இவ்வறிகுறிகள் உணர்த்துகின்றன. போதாக் குறைக்கு, ராகுல் காந்தி வேறு இளைஞர் காங்கிரஸ் சார்பில் தமது பங்குக்குப் பிரதமரிடம் ஓர் அமைச்சர் பட்டியல் தந்துள்ளார்! காங்கிரஸ் எம்.பி.க் களுக்குள்ளேயே அமைச்சர் பதவிக்குப் போட்டி; அதிருப்தி. மமதா பானர்ஜி மறைமுகமாக மிரட்டுகிறார். இன்னும் என்னென்ன சோதனைகள் மன்மோகன் சிங்குக்கு, வரும் ஐந்தாண்டுகளில் காத்துள்ளனவோ என்றுதான் எண்ணத் தோன்றுகிறது!

அமைச்சரவை என்பது, நாட்டை ஆள்வதற்கு ஏற்பட்டது என்பதே எல்லோருக்கும் மறந்துவிட்டது! பல்வேறு கட்சியினருக்கும் பதவி அளித்து, பணம் பண்ண வாய்ப்பும் ஏற்படுத்தித் தரும் ஒரு கூட்டுக் கொள்ளை முயற்சியாகிவிட்டது. இதை மறைப்பதற்குக்கூட யாரும் முயற்சி செய்வதில்லை!

இதற்கிடையே, இந்தத் தேர்தலுக்குப் பிறகு, கிரிமினல் குற்றம் சாட்டப்பெற்ற எம்.பிக்களின் எண்ணிக்கை, 128லிருந்து 153ஆக உயர்ந்திருக்கிறது! எவ்வளவுதான் முயன்றாலும், குற்றப் பின்னணி இல்லாதவர்களைக் கொண்டு ஒரு முழுமையான அமைச்சரவையை அமைக்கவே முடியாதுபோல் இருக்கிறது.

மன்மோகன் சிங் பல நிர்ப்பந்தங்களுக்குப் பணிந்து உருவாக்கும் அமைச்சரவை, கைக்கடக்கமாக, நிர்வகிக்க சுலபமாக இராமல், அனைத்துத் தரப்பினரின் அழுத்தத்தால் உருவான அரைவேக்காட்டு அமைச்சரவையாகத்தான் இருக்கும்!

திறமையானவர்கள், அறிவாளிகள், சிறந்த நிர்வாகிகள், பட்டறிவு படைத்தவர்கள் என்று நாட்டுக்கு உபயோகமானவர்களைக் கொண்டுதான் அமைச்சரவை அமைக்கப்பட வேண்டும். அவர்கள் அப்பழுக்கற்ற நேர்மையானவர்களாக இருக்க வேண்டும். இத்தகையவர்கள் கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டவர்களாகவும் இருக்கலாம். மன்மோகன் சிங்கூட அந்த அடிப்படையில்தான் முதன்முதலில் அமைச்சரானார். இன்று அவரே அரசியல் நிர்ப்பந்தங்களுக்குப் பணிய நேர்ந்துள்ளது. இந்த நாட்டின் வரலாற்றில் ஒரு மிகப் பெரிய கரும்புள்ளி! ●

# தீர்வு

**தமிழ்நாயகி**

அந்த ரெஸ்டாரண்டின் ஏ.ஸி. அறையில் அமர்ந்திருந்தான் ஆனந்த். அவன் அருகே வானவி. இருவரும் நல்ல சினேகிதர்கள். ஆனந்தின் மனைவி தேன்மொழி இருவர் மீதும் சந்தேகப்பட்டாள்.



ஆனந்தும் தேன்மொழியும் வெவ்வேறு துருவங்கள். அவனுக்கு காப்பி பிடித்தால் அவன் டீதான் போட்டுத் தருவாள். அவனுக்கு ரவா தோசை போட்டுக் கொடுத்தால் தனக்கு சாதா தோசைதான் வேண்டுமென்பாள். ருசியில் மட்டுமல்ல. வாழ்க்கையின் எதிர்பார்ப்புகளின் இந்த முரண்பாடுகள் விரவி நின்றபோது அவனால் கோபப்படாமல் இருக்க முடியுமா? அதன் விளைவு வானவி போன்ற நட்பைத் தேட வைத்தது.

இன்று தோழியோடு ஓட்டலுக்கு வந்திருக்கிறான். அடை சொல்லி விட்டு சாப்பிடுவதற்காக யத்தனித்தபோது, பேரர் சாம்பாரை ஊற்றிவிட்டான். வந்ததே கோபம்! ''நான் உன்னை சட்னிதானே கேட்டேன். சாம்பாரை ஏன் ஊற்றினாய்? எனக்குப் பிடிக்காத ஒன்றை நானே பணம் கொடுத்துச் சாப்பிட வேண்டுமா? வேறு அடை கொண்டு வா'' என்று தட்டை நகர்த்திவிட்டான்.

''ஆனந்த் நான்தான் சாம்பார் ருசியாக இருப்பதால் ஊற்றச் சொன்னேன். பிடிக்காவிட்டால் ஒதுக்கிவிட்டு சட்னி ஊற்றிச் சாப்பிடலாமே'' என்று கேட்டாள் வானவி.

''சட்னியைத் தொட்டு அடை சாப்பிடுவதுதான் எனக்குப் பிடிக்கும். இந்த சுவைக்காகத்தானே வீட்டு உணவையும் விட்டுவிட்டு இங்கே வந்திருக்கிறேன்.''

''சாதாரண உணவு விஷயத்திலேயே ஒத்துப்போகாத குணம் இருக்கிறபோது வாழ்க்கை விஷயத்தில் எப்படி உங்களால் ஒத்துப் போக முடியும்? சாம்பார் ஊற்றிய அடையை என்னிடம் நகர்த்திவிட்டு சட்னி போடப்பட்ட என்னுடைய அடையை நீங்கள் சாப்பிட்டிருக்கலாம். இந்த ஒரு கண சமயோசிதமான சிந்தனைதான் வாழ்க்கையின் பிரச்னையைத் தீர்க்கின்ற படிக்கல். இந்தச் சிந்தனையின்படி உங்க குடும்பத்தில் பிரச்னைகளையும் சமயோசிதமாகத் தீர்த்துக் கொள்ளலாம்'' என்று வானவி சொல்லி முடித்தபோது, அதே அறையின் இன்னொரு பக்கத்தில் அவர்களைச் சந்தேகித்து வேவு பார்க்க வந்த தேன்மொழி தலைகுனிந்திருந்தாள். ●




# ஐ.பி.எல்

எதிர்காலம் என்று பாராட்டுப் பெற்றவர்கள் யார் யார்?

**ச.ந.கண்ணன்**

2008 ஐ.பி.எல். போட்டி முடிவடைந்த போது யூசுப் பதான் இந்திய அணியின் ஒருநாள் போட்டிகளின் வெற்றிக்கு மிக அத்தியாவசியமானவர் என்று கண்டெடுக்கப்பட்டது. ரெய்னா என்கிற இளம் மனிதர் இவ்வளவு வலுகொண்டவரா என்று அதிசயிக்கப்பட்டது. ஐ.பி.எல்.லில் ஓஜா ஹாட்ரிக் எடுத்தது இந்திய அணிக்குள் நுழைய துருப்புச் சீட்டாக இருந்தது. மெக்ராத் போல வீசுகிறார் என்று சொல்லியே கோனியும் கூடாரத்துக்குள் நுழைந்தார். இந்த வருடம் சாதித்து இந்திய அணியின்

**மனீஷ் பாண்டே (வயது 19) - கர்நாடகா (பெங்களூர் ராயல் சேலஞ்சர்ஸ்)**

எப்படி ஒரு சிக்ஸர் பாகிஸ்தான் அணியின் கிரிக்கெட் வரலாற்றையே மாற்றி எழுதியதோ, அதே போல மனீஷ் பாண்டே ஐ.பி.எல்.லில் அடித்த செஞ்சுரி அவருக்குப் பெரிய கவனத்தைத் தேடிக்கொடுத்துவிட்டது. இள வயது திராவிடைப் பார்ப்பது போலுள்ளது அவரது டிரைவ்கள். அடுத்த ரஞ்சி போட்டியிலும் முத்திரை பதித்தால் இந்திய அணிக்குள் ஒரு இருக்கை நிச்சயம்.

**ஜகாதி (27) - கோவா - (சென்னை சூப்பர் கிங்ஸ்)**

தொடர்ந்து இரண்டு ஆட்டங்களில் தலா நான்கு விக்கெட்டுகள் எடுத்து தன்




# முத்துக்கள்

இருப்பை உறுதிப்படுத்திக் கொண்டார் ஜகாதி. முரளிதரனுக்கு இணையாக எதிரணியினருக்கு அச்சுறுத்தல் ஏற்படுத்தினார். பத்து வருடங்களாக முதல்தர கிரிக்கெட் ஆடியவருக்கு இப்போதுதான் மறுவாழ்வு. 2006ல் தேசிய அளவில் நடந்த 20-20 போட்டியில் மிகக்குறைந்த ரன்கள் கொடுத்ததைப் பார்த்து சென்னை சூப்பர் கிங்ஸ் இவரைத் தேர்ந்தெடுத்தது. பியூஷ் சாவ்லா, ரொமேஷ் பவார், ஓஜா, ஜகாதி என்று நிறையவே நம்பிக்கை கொடுக்கிறது இளைய தலைமுறை.

**கம்ரான் கான் (18) - உத்தரப்பிரதேசம் (ராஜஸ்தான் ராயல்ஸ்)**

முதல்தர கிரிக்கெட் எதுவும் ஆடாத 'சென்னை - 28' ரக வீரர்தான் கம்ரான் கான். எப்படியோ ராஜஸ்தான் ராயல்ஸ் அணியின் மேனேஜர் பார்வையில் பட்டு, பிறகு அவருடைய ஒவ்வொரு விக்கெட்டையும் அஷாம்கர்க் கிராம மக்கள் கொண்டாடித் தீர்த்தனர் என்று தினம்தினம் செய்திகளில் அடிபட்டார். ஆனால் அவருடைய சில பந்துகள் தவறான ஆக்ஷனைக் கொண்டிருக்கின்றன என்று பாதியிலேயே வெளியேற்றப்பட்டார். நல்ல பயிற்சியாளர்களால் கம்ரான் கானின் குறையை எளிதில் சரிசெய்துவிட முடியும்.

**சுதீப் தியாகி (21) - உத்தரப்பிரதேசம் (சென்னை சூப்பர் கிங்ஸ்)**

தொடர்ந்து சிறப்பாக ஆடிவந்த தியாகியை விட்டுவிட்டு என்ன பெரிய காரணத்துக்காக தோனி, கோனியைத் தேர்வு செய்தார் என்று யாருக்குமே புரியவில்லை. தியாகியை அரையிறுதியில் ஆடவிடாதது தோனி செய்த பெரிய தவறு. சென்ற வருட ரஞ்சி போட்டியில் 41 விக்கெட்டுகள் எடுத்து முதலிடம் பிடித்த தியாகி, இஷாந்த் சர்மாவுக்கு அடுத்து பேசப்படும் வேகப்பந்து வீச்சாளராக உருவாகி வருகிறார்.

இன்னும் சொல்லலாம். பாடியா, சங்வான் (டெல்லி டேர்டெவில்ஸ்), வினய் குமார் (பெங்களூர் ராயல் சேலஞ்சர்ஸ்), சொஹல் (பஞ்சாப் கிங்ஸ் லெவன்). 'இந்தியத் திறமைகள் வெளிப்படவேண்டும். இதுவே ஐ.பி.எல்.லின் நோக்கம்' என்றார் லலித் மோடி. ஐ.பி.எல். என்கிற அதி அற்புத வாய்ப்பை, தொடர்ந்து பௌலர்கள்தான் பயன்படுத்திக்கொள்கிறார்கள்.

# நுகர்வு

பத்தாண்டு கால அளவில் ஒரு சமுதாயத்தில் மதிப்பீடுகளும், போக்குகளும் மாறும் என்பது பொது கணிப்பு. அதைவிட வேகமாக மாற்றங்கள் உட்புகும் காலம் இது.

இன்றைய சூழல் எப்படி இருக்கிறது? இது தகவல் புரட்சிக் காலம். உலகின் எந்த மூலையில் ஒரு நிகழ்ச்சி நடந்தாலும் அதிகபட்சம் சில மணி நேரங்களிலேயே அது உலகம் முழுதும் பரவி விடுகிறது. இந்தோனேஷிய பூகம்பமோ, சோமாலியக் கரையோரம் கடற்கொள்ளையோ ஒரு சாதாரணக் குடிமகனுக்கே எட்டிவிடுகிறது. தில்லியில் தொழிற் சங்கப் பேச்சுவார்த்தை தோல்வி என சில நிமிடங்களிலேயே செய்தி கிடைத்து தென் மாநிலங்களில் வேலை நிறுத்த அறைகூவல்கள் கேட்கின்றன.

வீடியோ கான்ஃபரன்சிங் வேறு வந்திருக்கிறது! தொலைக்காட்சியில்



செய்தி சேனல்களே நிறைய வந்து விட்டன. 24 மணி நேர செய்திச் சேவை. வேறு நிகழ்ச்சிகள் ஒளிபரப்பாகிக் கொண்டிருந்தாலும் அதை ஊடுருவி நாடாச் செய்திகள் என முக்கிய விஷயங்களை வெளியிடுகிறார்கள்.



# எஸ்.ஷங்கரநாராயணன்

இன்றைய சாமானியன் கண்ணும் காதும் வாயுமான செயல்வேகத்துடன் வளர்ந்திருக்கிறான். வெளிநாட்டு விவகாரமோ, அல்லது உன்நாட்டு நிகழ்வோ, எந்தப் பிரச்னை குறித்தும் தன் அரசாங்கம் இது பற்றி என்ன முடிவு செய்கிறது என அவன் கவனிக்கிறான். அதைப் பற்றிச் சிந்திக்கிறான். வெளியே பேசி விவாதிக்கிறான். மூளை பரபரப்பானவன் இந்தக்கால மனிதன்.

அவரவர் உலகம் அகலப்பட்டு விட்டது. அல்லது உலகம் நம் உள்ளங்கைக்குள் சுருங்கிக் கொண்டு வருகிறது எனவும் சொல்லலாம்.

விண்கலங்கள் வானில் மிதந்தபடி செய்திகளை அனுப்பிக் கொண்டிருக்கின்றன. புயலையும் மழையையும் துல்லியமாகக் கணிக்கிறார்கள்.

இருந்த இடத்தில் இருந்தபடி உலகின் எந்த மூலையையும் தொடர்புகொள்ள முடிகிறது நம்மால். தொலைத் தொடர்பு வசதிகள் அபாரமாய் வளர்ச்சியடைந்து விட்டன. எல்லாம் சரி...

எந்தவொரு கால மாற்றமும் சமுதாய மாற்றமும் தன்னளவில் முழு வெற்றிகளைக் கொணர்வது இல்லை. இந்த ஊடக வளர்ச்சி, தொலைத் தொடர்பு வளர்ச்சிகளின் பாதிப்பு என்ன?

# வேட்கை!

இந்தியா ஓர் ஆன்மிகக் கலாசார நாடு. மக்கள்தொகை நெருக்கம் மிக்க நாடு.

நமது வேதங்களையும், கணித சூத்திரங்களையும், இலக்கியச் செழுமையையும் வியந்து பாராட்டினார்கள் வெளிநாட்டினர். நமது கலாசாரத்தை ஆன்மிகத்தைக் கற்றுக் கொள்ள விரும்பி அவர்கள் இந்தியா வந்தனர்.

ஊடகத்துறை வளர்ச்சி பல கலாசாரங்களை ஒன்று கலக்கிறதாய் இருக்கிறது. பேச்சுவழக்குகள், பாவனைகள், உடையுடுத்துதல், முக அலங்காரம்... என இந்த ஊடகங்கள் வேறு கலாசாரத்தை நம்மீது திணிக்கின்றன. நமது மொழிகளை மறந்து ஆங்கிலத்தில் பேசுவதை கௌரவமாகக் கருதுகிறோம். நம் மொழியைப் பேசும் போது கூட ஆங்கில உச்சரிப்பும் ஏற்ற இறக்கங்களும் தந்து அலங்கோலம் செய்கிறோம்!

சீயக்காய் என நாம் பயன்படுத்தும் கூந்தல் பராமரிப்புப் பொடியை ஊடகங்கள் ஷாம்பூவால் வீழ்த்த முயற்சிக்கின்றன. கண்ணைப் பறிக்கிற, மூளையைப் பறிக்கிற விளம்பரங்கள். வெயிலுக்கு மோர் குடிக்கிற மனிதனை, குளிர்பானம் குடி, ஐஸ்கிரீம் சாப்பிடு என அவை கையைப் பிடிக்காத குறையாய் அழைக்கின்றன. சாதாரணமாகவே புதுமையை விரும்பும், மாற்றத்துக்கு ஆவல்படும் மனம் இதில் விழ்ந்துவிடுகிறது. இது ரீதியாய் யோசிக்க அவனுக்கு அந்த விளம்பரங்கள் இடந் தருவதில்லை. செய்திகளே கூட, அதைத் தொடர்ந்த பிற சித்திரிப்புகளால் இந்த

ஊடகங்களில் திசைதிருப்பப்பட்டு விடுவதையும் பார்க்க முடிகிறது. ஒரே செய்தியை விதவிதமாகச் சொல்கிறார்கள். கருணாநிதிக்கு தில்லி கண்டிப்பு - என ஒருவர் சொல்வார். கருணாநிதி - தில்லி விரைந்தார் - என மற்றொருவர். கருணாநிதி தில்லியில் அவசர ஆலோசனை - என இன்னொருவர். ஒரே செய்தியைச் சாதகமாகவும், பாதகமாகவும் வெவ்வேறு ஊடகங்கள் வெளியிட்டு மக்களைக் குழப்புகின்றன. இந்த அரசியல்வாதிகள், தலைவர்கள் அவர்களே பேசிக் குழப்புவது வேறு விஷயம்.

நுகர்வுக் கலாசார மேல்நாட்டு பாணி அப்படியே உலகையே கவ்விப் பிடித்து ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கிறது. நம்மாட்கள் ஒருபடி மேலே போய், டிஜிட்டல் பேனர், போஸ்டர் என பிறந்த நாளுக்கும் கண்ணீர் அஞ்சலிக்கும் தெருவையே சுவர்களையே சூறையாடுகிறார்கள். ''எனக்குப் பிறந்தநாள் வாழ்த்துச் சொன்ன இவர்களுக்கு நன்றி'' என ஒரு போஸ்டர்!

நுகர்வுக் கலாசாரத்தின் மாய வலையில் உலகம், குறிப்பாக நாம் சிக்கித் திணறிக் கொண்டிருக்கிறோம். குடும்ப நலத் திட்டங்கள் போன்ற சமூக நலத் திட்டங்கள் இங்கே தேவையாய் இருந்தன. மேலை நாடுகளில் ஜனத்தொகை இத்தனைக்கு மிரட்டுவதாக இல்லை. நாம்தான், நாமிருவர் நமக்கு இருவர் என முழங்க ஆரம்பித்து, இப்போது நாம் இருவர் நமக்கு ஒருவர் - என நிற்கிறோம். இதைவிடக் குடும்பத்தைக் குறைத்துவிட முடியாது அல்லவா?

உறவுகளின் மேன்மை, அண்ணன் தம்பிகளோடு, அக்கா தங்கைகளோடு வளர்வதால் மனம் பெறும் அழகிய பண்புகள், விட்டுக் கொடுத்தல், கூட்டாகக் கலந்து மகிழ்தல், கூட்டுக் குடும்பம் எனப் பெரியவர்களை மதித்தல், பேணுதல் - எல்லாமே கைவிட்டுப் போய்விட்டன. முதியோர் இல்லங்கள் அதிகரித்து வருகின்றன.

நுகர்வுக் கலாசாரத்தின் பாதிப்பினால் நமது குடும்ப உறவுகள் வீரியமிழந்து விட்டன. வசதிகளைப் பெருக்கிக் கொள்கிற ஆவலில் தேவையில்லாத எத்தனை சாமான்கள் வீட்டில் குவிகின்றன? இதில் அடுத்த வீட்டில் ஒரு சாமான் வாங்கி, அது நம்மிடம் இல்லாததில் எத்தனை இழப்பாய் உணர வைத்து விட்டார்கள்!

எதற்கெடுத்தாலும் புதுமை தேடுகிற உள்ளாவேசத்தைத் திணிக்கின்றன அவை. ஒரு வருடம் பயன்படுத்தி விட்டால் அதை



**''விலைவாசி உயர்ந்துடுச்சுனு மக்கள் புலம்புறாங்க தலைவரே!''**

**''கடைக்காரன்கிட்டே பேரம் பேசி வாங்கத் தெரியலைனா நாம என்ன பண்ண முடியும்?''**

**- சிக்ஸ் முகம்**

மாற்றி புது செல்போன் வாங்கு - எக்ஸ்சேன்ஜ் ஆஃபர் என்கிறார்கள். பழைய நகைகளை மாற்றி புது மோஸ்தரில் அணிந்து கொள்ள விளம்பரங்கள். சாமானியனின் ஆசை எனும் சிறு பொறியை ஊதிப் பெரிதாக்கி அவர்களை சுயநல அடிப் படையிலேயே வைத்திருக்க இந்த நுகர்வுக் கலாசாரம் உந்துகிறது.

பாசம், ஒட்டுதல், விட்டுக் கொடுத்தல், இரக்கம், பரிவு, பிறரிடம் நேசம் என அழகிய மானுடப் பண்புகளை ஒளிமங்கச் செய்கின்றது நுகர்வு வேட்கை.

உனக்குப் பிறந்த நாளா? நண்பர்கள் கூடி போஸ்டர் அடி. தெருவில் ஒட்டு. ஒட்டாத நண்பன் அன்பில்லாதவனாக ஆகிவிடுகிறான்!

கல்யாண நாளா? கடையில் போய் ஒரு வாழ்த்து அட்டை வாங்கி, அதை சஸ்பென்சாக காலையில் அவளிடம் அவன், அவனிடம் அவள் தர வேண்டும். தராதவர்கள் அன்பில்லாதவர்கள் ஆகிவிடுகிறார்கள்.

எதையுமே பெரிதுபடுத்தி விகாரப்படுத்தி விட்டார்கள்.

மகளிர் தினம், தந்தையர் தினம், தாய் தினம் - எல்லாம் வியாபாரப் பின்னணியுடன். வியாபாரத் தந்திரத்துடன் அவை பெருவேட்டையாடுகின்றன மக்களை. அட்சய திருதியை நன்னாள் - நகை வாங்கிச் செல். புத்தாண்டா, பொங்கலா... எதையோ சொல்லி தள்ளுபடி விற்பனை என அவசரமாய் மக்களை அழைக்கிறார்கள். பொய்கள் விளம்பர உத்திகள் என்கிற நியாயம் ஏற்படுத்தப் பட்டுவிட்டது.




ஒரு காலத்தில் ஒரு நாட்டின் மேன்மை மெல்ல அடுத்த நாட்டுக் கலாசாரத்துடன் கலந்து முயங்கி இரண்டு நாடுகளும் அதனால் பயன்பட்டன என்றிருந்தது. தகவல் தொழில்நுட்ப வளர்ச்சியால் கலாசார மேன்மைகள் இற்று விழ்ந்தன. மனிதனின் பலவீனங்களை, வியாபாரப் போட்டி உலகம் அங்கீகரிக்கிற பாவனையுடன் மக்களை வீழ்த்தி வருகிறது...

மீள்தல் இனி சாத்தியமா? சாத்தியப்பாடுகளை விவாதிப்போமே... அடுத்த தலைமுறையின் நன்மைக்காக... ●

**"அரக்க பரக்க காலைல பீச்சுலேயும், சாலைகளிலேயும் நடைப்பயிற்சி செய்யறதை நிறுத்தினாலே போதுங்க, மாரடைப்பு வராம பார்த்துக்கலாம்" என ஒரு ஷாக் நியூஸ் சொல்கிறார் இதய நிபுணர் டாக்டர் எஸ்.நாகராஜன்.**

**"என்ன ஸார் இது புதுக்கதையாயிருக்கு. கொஞ்சம் விலாவரியா சொல்லுங்களேன்" என்றோம்.**

"பொதுவாகவே அனைவருக்கும் அதிகாலை 3 மணி முதல் 10 மணி வரை இரத்தக் கொதிப்பு சற்று அதிகமாக இருக்கும். உலகம் பூராவும் நடத்தப்பட்ட ஓர் ஆய்வின் ஒரு பகுதியாக 3 லட்சம் மக்களின் உடம்பில் ஒரு சின்ன இரத்த அழுத்தம் பார்க்கும் கருவியைப் பொருத்தி 48 மணி நேரங்கள் (ஐந்து நிமிடங்களுக்கு ஒருமுறை) ஆராய்ச்சி செய்து பார்த்ததில் மேலே குறிப்பிட்ட நேரத்தில்தான் இரத்தக் கொதிப்பு அதிகமாக இருப்பதாகத் தெரியவந்துள்ளது.

காலையில் வியர்க்க விறுவிறுக்க நடைப்பயிற்சி மேற்கொள்வது ஒருவரது இதயத்துக்கு நல்லதல்ல. அந்த நேரத்தில் மனசையும், இதயத்துடிப்பையும் சீராக வைத்துக் கொள்ள தியானம், யோகா பயிற்சி போன்றவற்றை மேற்கொள்ளலாம். ஆனால் கடுமையான உடற்பயிற்சியையும், வேகமான நடைப்பயிற்சியையும் காலை வேளையில் தவிர்த்து விடுவது நல்லது. மாலை நேரத்தில் நிச்சயம் மிதமான வேகத்தில் நடந்து செல்லுங்கள். நடை என்பது உடற்பயிற்சியாகப் பார்க்கப்படாமல் நமது அன்றாடச் செயல்களில் ஒன்றாக இருக்க வேண்டும். இரத்தக் கொதிப்பு ஏறாமல் இருக்க இதுதான் முதல் படி" என்ற டாக்டரிடம் மேலும் சில கேள்விகளை முன்வைத்தோம்:

**"இரத்தக் கொதிப்பு வந்தால் உப்பை ஏன் குறைக்கணும்?"**

"சாதாரணமாகவே நாம் அனைவரும் தினமும் பத்து கிராம் உப்பு சாப்பிட்டாலே போதுமானது. ஆனால் நாம் குறைந்தபட்சம் முப்பது கிராம் உப்பையாவது சாப்பிட்டு விடுகிறோம்.

உப்பில் உள்ள சோடியம் உடலில் அதிகமாகச் சேரச் சேர, அது நமது உடம்பில் உள்ள நீரை அதிகப்படுத்தி இரத்தக் கொதிப்பை அதிகமாக்கும்.

மோர் மிளகாய், ஊறுகாய், வத்தல், அப்பளம்,





# வேணாம்... வரும்!



★ எஸ்.நாகராஜன்

வடாம் ஆகிய ஐந்து பொருட்களையும் தவிர்க்கனும். சர்க்கரையையும், உப்பையும் வெள்ளை விஷங்கள் எனச் சொல்வார்கள். இந்த இரண்டையும் அளவாகப் பயன்படுத்தி வந்தாலே போதும்; இரத்தக் கொதிப்பு ஏற்படாமல் நம்மைப் பாதுகாத்துக் கொள்ளலாம்.''

**''உப்பைத் தவிர பிரஷருக்கு ஃப்ரெண்டா இருக்கும் ஃபுட் எது ஸார்?''**

''முற்றின தேங்காய், தேங்காய் எண்ணெயில் சமைக்கப்பட்ட பதார்த்தங்கள் சாக்லேட், கேக், ஐஸ் க்ரீம்கள், பதப்படுத்திய உணவு வகைகள் பிரஷருக்கு ஃப்ரெண்ட்ஸ். கூடவே கூடாது.''

**''பிரஷர்ன்னு எப்படித் தெரிஞ்சுக்கறது?''**

''நிறைய சமயங்களில் எந்தவிதமான குறிப்பிட்டுச் சொல்லும்படியான அறிகுறிகளும் தென்படாமல்தான் அது தோன்றும். ரொம்ப அதிக அளவு இரத்தக் கொதிப்பு ஏற்படும்போதுதான் தீராத தலைவலி, இடைவிடாத வாந்தி, மயக்கம் ஏற்பட்டு 'பளிச்'சுன்னு தெரியும்.''

**''2020 ஆண்டு நம் இந்தியாதான் இரத்தக் கொதிப்பு நோய்களுக்கு உலகத்தின் தலைநகரமாகத் திகழும் என்று சமீபத்தில் ஒரு மருத்துவச் செய்தி வெளியிடப்பட்டுள்ளது. இரத்தக் கொதிப்பு வராமல் இருக்க மக்கள் என்னதான் செய்யணும்?''**

★ மிடில் ஏஜைத் தாண்டிட்டா, மாதம் ஒருமுறை கட்டாயம் மருத்துவரிடம் சென்று தங்களது பிரஷரை சரிபார்த்துக் கொள்ள வேண்டும்.

★ வலி நிவாரண மருந்துகளை மருத்துவரின் ஆலோசனை இல்லாமல் உட்கொள்ளவே கூடாது.

★ பிரஷருக்கு சித்த மருந்துகளை உட்கொள்வதைத் தவிர்க்க வேண்டும். சில சித்த மருந்துகளில் பாதரசம் போன்ற உலோகங்களைச் சிறு சிறு அளவுகளில் பயன்படுத்துவதால் அவற்றின் தொடர் உபயோகம் இதயத்தைப் பாதிக்கும்.

★ கல்லூரிகள், அலுவலகங்கள் போன்ற இடங்களில் பிரஷர் பார்க்கும் கருவியை வைத்து இரத்தக் கொதிப்பைக் கண்காணிக்கச் செய்யலாம்.

★ உணவில் கட்டுப்பாடும், மனத்தில் அமைதியும் தான் பிரஷரைக் கட்டுப்படுத்தும் எளிய அஸ்திரம்.

**- நளினி சம்பத்குமார்**

## தவணைமுறை தற்கொலை



''ஏய்! கருப்பழகி உனக்கு மட்டும் எப்படிடி வெள்ளை மனசு ஃப்ரண்ட்ஸ்ங்க ட்ரெயின் கம்பார்ட்மெண்ட் மாதிரி தொடர்ச்சியா கிடைக்கறாங்க?''ன்னு சக தோழிங்க சசியைக் கிண்டலடிக்கும் போது... ''நடை, உடை, பாவனை மட்டுமில்லடி மனசும் சேர்ந்துதான் வாழ்க்கையை வடிவமைக்குது. காந்தம் எப்படி இரும்பை இழுக்குதோ அப்படித்தான் நம்ம மனசும் நமக்கான தோழமையை ஈர்த்துக்கும்'' என்பாள் சசி. இப்போது சித்தனோடு பேசிக் கொண்டிருக்கையில் சமூக சேவகர் நாராயணனின் அழைப்பு தொலைபேசியில் வந்தபோது அந்தப் பழைய உரையாடல் ஞாபகத்தில் வந்தது சசிக்கு. கூப்பிட்டபடி இருந்த அழைப்புக்கு 'ஸாரி பிறகு பேசுகிறேன்'' என்று எஸ்.எம்.எஸ். செய்தியை அனுப்பி விட்டு சித்தனிடம் கேட்டாள்: ''விஜய் நாகஸ்வாமி ஏன் அப்படிச் சொன்னார்?'' ''குடி நம்ம கண்ட்ரோலில் இருக்கிற காலகட்டம் கடந்து நாம அதனோட கண்ட்ரோலுக்குப் போற காலகட்டம்தான் குடி நோயாளி கட்டம். எல்லோருக்கும் குடியை வெல்லும் மனோபலமும் விருப்பப்பட்ட உடன் குடியை நிறுத்தும் வல்லமையும் கிடையாது. மனசு விட்டுடலாம்னு சொன்னாலும் உடம்புல ஏற்கெனவே தேங்கியிருக்கும் ஆல்கஹால் அவ்வளவு சீக்கிரம் விட்டுவிடாது. அதனாலதான் மருத்துவரின் துணையோடு மருந்தின் பலத்தோடு அதற்கான வழிமுறையோடுதான் விடணும் என்று சென்னை இந்திரா நகரிலுள்ள மறுவாழ்வு மையத்துக்கு என்னைப் போகச் சொன்னார்'' நான்ஸ்டாப் பாட்டு பாடும் எஸ்.பி.பி. மாதிரி மூச்சு விடாமல் சொல்லி ஆசுவாசப்படுத்திக் கொண்டார் சித்தன். ''என்ன ஸார் குடிக்கிறவருக்குத் தெரியாமலே மருந்து கொடுத்து குணப்படுத்தலாம்னு நிறைய போஸ்டர் பார்க்கிறேனே...'' என்று முடிக்கும் முன்பே, ''நோ... நோ... அதெல்லாம் சுத்த பேத்தல். அப்படி அவங்க செஞ்சாலும் அது நிரந்தரமில்ல. அடுத்த மாசமே குடிக்க ஆரம்பிச்சுடுவான்'' தடாலடியாக மறுத்தார். ''டி.டி.கே. மறுவாழ்வு

**மனசு விட்டுடலாம்னு சொன்னாலும் உடம்புல ஏற்கெனவே தேங்கியிருக்கும் ஆல்கஹால் அவ்வளவு சீக்கிரம் விட்டுவிடாது.**



• அமிர்தம் சூர்யா •

8

# சொந்தச் செலவில் சூன்யம்!

ஆணிவேர் மாதிரி மனசுக்குள்ள செருகிக்கிட்ட உன் அப்பாவுக்கு வாழ்த்துக்கள்'' என்றார் இடைச் செருகலாய் சித்தன்.

''ஸார் அந்த Detox / Accன்னா என்ன?''

''ஆரம்ப நிலை குடிநோயாளிக்கு Detox சிகிச்சை. இங்க பதினைந்து நாள் மட்டும் தங்கி சிகிச்சை எடுக்கணும். உடம்புல தங்கிவிட்ட ஆல்கஹாலை மருந்துகளால் நீக்கி, புத்துணர்ச்சிக்கு குளுக்கோஸ் ஏத்தி, மனத்துக்குத் தெம்பு தரும் கவுன்செலிங்குடன் அனுப்பி விடுவர். இன்னொன்று Acc சிகிச்சை - இது தீவிர குடி நோயாளிக்கானது. ஒரு மாதம் தொலைபேசித் தொடர்பு கூட இல்லாதபடி தனிமையில் சிகிச்சை. சனிக்கிழமை மட்டும் உறவினர் வரலாம். இந்த ஒரு மாதத்தில் வாழ்க்கை பாணியையே மாற்றி விடுவர். அதிகாலை பஜன், பின் யோகா, அடுத்து தியானம், பிறகு உடற்பயிற்சி, அப்புறம் நூலகம் சென்று படித்தல், கவுன்செலிங், மருத்துவ சோதனை, ஒன்பது மணிக்கு கட்டாயம் தூங்கச் செல்ல வேண்டும். ராணுவ நடவடிக்கை போன்ற இச்செயலால் வாழ்க்கையே மாறிப் போகும். இவ்வளவுக்குப் பிறகு, அடுத்த மாதம்தான் after care centreயை விட்டு வெளியேற முடியும். இதில் சிகிச்சை பெற ஒரே தகுதி கர்வம், சுயம், தற்பெருமையெல்லாம் உடைத்து நான் புது மனிதனாவேன் என்கிற சபதம் மட்டுமே. இதில்

மையத்துக்கு நான் போனவுடன் Detox பிரிவா இல்லை Acc செக்ஷனா என்று கேட்டார்கள். திருடனாய்ப் பாத்துத் திருந்தா விட்டால் திருட்டையும் ஒழிக்க முடியாது என்ற பழைய பாடல் குடிக்கும் ரொம்பப் பொருந்தும். திருந்தணும் என்கிற எண்ணத்தை



**எச்சரிக்கை :** கல்லீரல் பாதிக்கப்படுவதால் வெகு சுலபமாக மஞ்சள்காமாலை பீடிப்பதும், எதிர்ப்பு சக்தி அடியோடு குறைவதால் எலும்புருக்கி எனும் TB நோய் உடனடியாகத் தொற்றி ஆளை எலும்பும் தோலுமாக மாற்றி இருமலோடு இரத்த வாந்திக்குக் கொண்டு செல்லுதலும் தற்கொலையின் 8வது தவணை.

சிகிச்சை எடுத்தபின் கணையாழி பிரசாந் ஆகிய நான் புதியதாய்ப் பிறந்தேன். இங்குதான் நான் சித்தனாக புதுப்பெயர் சூட்டி என் முதல் பிறந்த நாளை ஆஸ்பத்திரியில் கொண்டாடினேன். எனது பத்து வருட குடிப்பழக்கம் இரண்டு மாதத்தில் சிகிச்சையால் ஒழிந்தது. இங்குதான் பத்திரிகைக்கான கம்ப்யூட்டர் பயிற்சியையும் எடுத்தேன். குடியில் நான் இழந்த செல்வம் ஏராளம். ஒரு நாளைக்கு குவார்ட்டருடன் சைட் டிஷ் சேர்ந்து நூறு ஆகும். (இது மிகக் குறைந்த கணக்கு. ஃபுல் பாட்டிலும் தாண்டும்) 100 x 365 (ஒரு வருடம்) = 36,500 என்றால் பத்து வருடம் நான் செல வழித்தது மூணு லட்சத்து அறுபத்தைந்தாயிரம். என் நிம்மதியை உடல் நலத்தை மனத்தைக் கெடுத்துக் கொள்ள. இதைத்தான் சொந்தச் செலவில் சூன்யம் வைத்துக் கொள்ளல் என்பார்களோ!'' என்று ஆய்வுக் கட்டுரை தாக்கல் செய்தது போல் பேசி முடித்தார்.

சசிக்கு 'பாடம்' நாராயணன் என்கிற சமூக சேவகர் சொன்னதுதான் ஞாபகத்தில் வந்தது. பெங்களூரில் நிம்மான்ஸ் மருத் துவமனை உலக சுகாதார நிறுவனத்துடன் இணைந்து செய்த ஆராய்ச்சியின் முடிவு: ஐந்து லட்சம் பேர் குடிகாரர்களாய் இருந்ததால் அரசுக்கு 846 கோடி வருவாய் வந்ததாம். குடியால் ஏற்பட்ட விபத்து, மருத்துவப் பாதிப்பு, மனிதசக்தி இழப்பு இவற்றால் அரசுக்கு ஏற்பட்ட நேரடி, மறைமுக செலவுகளின் மதிப்பு 1,147.48 கோடியாம்! தமிழகத்தில் அரசுக்கு இதே ரீதியில், வருமானம் 7,500 கோடி; செலவு 9,556 கோடியாம். இந்த திரவ சாத்தானைத் தான் திராவிட அரசு கொள்கையற்று கூஜாவிலிருந்து திறந்து விட்டிருக்கிறது.

**அரசுக்கு 846 கோடி வருவாய் வந்ததாம். குடியால் ஏற்பட்ட விபத்து. மருத்துவப்பாதிப்பு. மனித சக்தி இழப்பு இவற்றுக்கு அரசு செய்யும் செலவு 1.147.48 கோடியாம்!**

''என்னம்மா சசி?'' என்று சித்தன் எழுப்பிய குரலால் நினைவோட்டம் அறுந்து எழுந்தவள், ''ரொம்ப தேங்க்ஸ் ஸார். நல்லா புரிய வெச் சிட்டீங்க. அப்பாவுடைய சொந்தக்காரங்க கோவை யில் இருக்காங்க. நாளைக்கே கோவையிலி ருக்கும் கஸ்தூர்பா நினைவு குடிநோய் தீர்க்கும் சிகிச்சை மையத்துக்கு அழைச் சிட்டுப் போய் உங்களைப் போலவே புது மனிதனா புத்தம்புது பழைய அப்பா வாகத் திரும்ப அழைச்சிட்டு வருவேன்'' என்றாள் சசி. கூடவே சசியின் அப்பாவும் சித்தனுக்கு இருகரம் கூப்பி மௌன நன்றியை மனசிலிருந்து கரங்களுக்குக் கடத்தி நின்றார்.

(சசி நாளை கோவைக்குச் செல்வாள்...)

# பாலிடிக்ஸ் போட்டி - 3 முடிவு

**நட்சத்திர பங்களா!**

கல்கி 3.5.2009 இதழில் வெளியிட்ட பாலிடிக்ஸ் போட்டி - 3ல் கலந்து கொண்டு திக்குமுக்காட வைத்த வாசகர்களில் இருந்து, சரியான விடை எழுதி, குலுக்கலில் பரிசு பெறுபவர்களை இதோ அறிவிக்கிறோம். இவர்கள் தலா ரூ.100/- பரிசு பெறுகிறார்கள்.



1. எஸ்.உமாதேவி - திருவண்ணாமலை, 2. பி.ஆர்.மயிலப்பன் - ஈரோடு, 3. ப.செல்வன் - கல்பாக்கம், 4. கே.விஸ்வநாத் - பெங்களூர், 5. எம்.எம்.ராமராஜ் - முடுதுறை, 6. க.மோகன் - சிதம்பரம், 7. மு.வைத்தியநாதன் - கும்பகோணம், 8. மு.இளஞ்சேரன் - கோவில் பட்டி, 9. எஸ்.ஜானகி - உடுமலைப்பேட்டை, 10. வி.சி. வெங்கடேஷ், திருச்சி-2

**சரியான விடைகள்:**

1.ஈ, 2.இ, 3.ஆ, 4.உ, 5.அ, 6.ஊ

மிஞ்சிய திருமாவளவனுக்குப் பொருத்தமாக பாடல் வரியை எழுதி ரூ.1000/- பரிசு பெறுபவர்: **பி.டி.பிரகாஷ்**, தஞ்சாவூர்.

பாடல்வரி : நட்சத்திர பங்களா திக்காதடி சிங்கிளா

# கிண்டல் காலனி

# ஐயா வாங்க!

முப்பது ரூபா 'கன்ஸல்டிங்' ஃபீஸ் கொடுத்து சமீப காலம் வரை மருத்துவம் பார்த்துக்கொண்ட டாக்டர், இப்போது அதே இடத்தில் கீழும் மேலுமாக ஒரு மருத்துவமனையைக் கட்டி விட்டார்.

நான் முதன்முதலாக அந்த மருத்துவ மனைக்குப் போக வேண்டிய சந்தர்ப்பமும் வந்தது. ப்ளஸ் டூ படிக்கும் என் மகனுக்கு லேசாக ஜுரமும் தலைவலியுமாக இருக்கவே, பரீட்சையின் போது உடம்புக்கு ஏதாவது வந்துவிடப்போகிறதே என்று கவலையோடு அவனை டாக்டரிடம் அழைத்துப் போனேன். டாக்டர் ரொம்ப உற்சாகமாக, ''வாங்க, வாங்க! எங்கே ரொம்ப நாளா உங்களைக் காணும்?'' என்றார். திக்கென்றிருந்தது. ''ஒண்ணுமில்லை.. பையனுக்கு லேசா ஜுரம்... பரீட்சை வேற இருக்கு'' என்று திக்கித் திணறிச் சொல்லி முடித்தேன்.

''இப்பத்தான் ஆஸ்பத்திரியே இருக்கே? ஒரு ரெண்டு நாள் அட்மிட் செஞ்சு நல்லா பார்த்துடலாமா? ஒரு ரூம் காலியாகத்தான் இருக்கு!'' என்றதும், எப்படியோ தப்பித்தால் போதுமென்று அடித்துப் பிடித்து வீட்டுக்கு வந்து விட்டோம். அவனுக்குக் கை வைத்தியமாய் மிளகு கஷாயம் வைத்துக் கொடுத்து, ஆகாரமாகக் கஞ்சியைப் குடிக்கக் கொடுத்து ஓய் வெடுக்க வைத்ததில் உடம்பு சரியாகப் போனது தனிக் கதை.

எங்கள் ஏரியாவிலேயே இருக்கும் என் பெற்றோருக்கும் இவர்தான் டாக்டர். தந்தை ஒரு நாள் கொஞ்சம் சளியும் இருமலுமாக இருக்கவே டாக்டரிடம் சென்றார்.

''இப்போ அந்தந்த வியாதிக்கு அந்தந்தத் துறையைச் சேர்ந்த டாக்டருங்களே இங்கே வர்றாங்க சார்!'' என்று சொல்லி, அங்கேயிருந்த ஈ.என்.டி. ஸ்பெஷலிஸ்டைப் பார்க்க வைக்க, ஒரு சாதாரணமான இருமல் 'சிரப்பில்' சரியாகப் போயிருக்கக் கூடிய இருமலுக்கு, ஈ.என்.டி. ஸ்பெஷலிஸ்டைப் பார்த்து இருநூறு ரூபா ஃபீஸ் தண்டம் அழுது அவர் எழுதிக் கொடுத்த ஒரு அடி நீள லிஸ்டிலுள்ள மருந்துகளைத் தவிர்க்க முடியாமல் அங்கேயேயுள்ள ஃபார்மஸியில் வாங்கிக் கொண்டு நொந்து போய் வீடு திரும்பினார்.

ஒரு ஆறு மாதம் கழித்து அந்தப் பக்கமாகப் போன போதுதான் பார்த்தேன், மருத்துவமனையில் இரண்டாவது மாடியும் கட்ட ஆரம்பித்து விட்டார்கள். வாசலில் ஆம்புலன்ஸ் நின்று கொண்டிருந்தது. பரிசோதனை செய்யப் புதிய கருவிகளெல்லாம் வாங்கியிருப்பதாகப் பேசிக் கொண்டார்கள்.

இதற்கிடையில் சற்றே உடல் நலக் குறைவோடு இருந்த என் தாயார் தூக்கத்திலேயே மாரடைப்பால் இறந்து விட்டார். பழக்கமான டாக்டர் என்பதால் 'மரணச் சான்றிதழ்' வாங்க அவரிடம் போக நேர்ந்தது.

என் தாயார் இறந்ததைக் கேள்விப்பட்ட டாக்டர் மிகவும் வருத்தமாக, ''த்சொ! த்சொ! எனக்குத் தெரியாமப் போயிடுச்

ரேவதி பாலு




# அம்மா வாங்க!

சேம்மா!'' என்று கூறவும் நான் மிகவும் மனம் நெகிழ்ந்து போனேன். 'என்ன இருந்தாலும் குடும்ப டாக்டர் என்றால் ஒரு தனி பாசம்தான்' என்று நினைத்துக் கொண்டிருக்கும்போதே,

''நீங்க அவங்களுக்கு உடம்பு சரியில்லாம இருக்கிறபோதே உடனே வந்து, சொல்லியிருந்தீங்கன்னா, எங்ககிட்ட இருக்கிற ஆம்புலன்ஸிலேயே அவங்களைத் தூக்கிப் போட்டுக்கிட்டு வந்து இங்கேயிருக்கிற புதுப் புது மெஷின்ல எல்லாம் அவங்களை ஒரு ரவுண்ட் போட்டுப் பார்த்திருப்போமில்ல? ஒரு நல்ல சான்ஸ் 'மிஸ்'ஸாயிடுச்சே! த்ஸொ! த்ஸொ!'' என்று டாக்டர் தொடர்ந்து பேச எனக்கு மயக்கம் வரும் போல் ஆகிவிட்டது. எங்கே அங்கேயே மயங்கி விழுந்தால் என்னைப் பிடித்துப் போட்டு 'அட்மிட்' செய்து விடப் போகிறாரே என்று பயந்து, மருத்துவமனையை விட்டு வெளியே வந்தபோது, ஜவுளிக் கடைகளில் 'ஆடித் தள்ளுபடி' விற்பனைக் காலங்களில் கூவுவார்களே அதைப் போல, 'ஐயா வாங்க! அம்மா வாங்க! எங்ககிட்டே வந்து சிகிச்சை எடுத்துக்குங்க!' என்று யாரோ பின்னாலேயே கூவுவதைப் போல பிரமையாக இருந்தது. கையைப் பிடித்து இழுப்பதற்குள் விட்டேன் ஜூட்! ●



# கோயிலுக்குள் கம்ப்யூட்டர் பயிற்சி!



**"பொருட்கள் திருடு போனால் அழுது புலம்புவார்கள், போலீஸில் புகார் செய்வார்கள். நீங்களோ, மீனவக் குப்பம் முழுக்க ஸ்வீட் கொடுத்தீங்க. ஏன் இப்படி?" என்று சரவணன் என்கிற சடகோபராமானுஜதாசனைக் கேட்டால்...**

"என்ன ஸார் செய்ய முடியும்? அன்ன தானத்தை விட கல்வி தானம் உசத்தின்னு நல்லவா கொடுக்கிற உதவியை வெச்சுத் தான் ஸ்ரீ ராமானுஜ சாரிடபிள் டிரஸ்ட் ஒன்றை பெரம்பூரில் ஆரம்பிச்சு, அதோட ஒரு கிளையை மீனவக் குப்பத்துப் பிள்ளைகள் பயன்பெற எண்ணூரில் தொடங்கினோம். இது பிஸினஸ் இல்ல ஸார். ஊனமுற்ற மாணவர்களுக்கு ஒரு ரூபாய் கம்ப்யூட்டர் பயிற்சியும் ஏழைப் பிள்ளைகளுக்கு இருபத்தைந்து ரூபாயிலும், நடுத்தரக் குடும்பத்தாருக்கு முன்னூறு ரூபாயிலும் பயிற்சி கொடுக்கிறோம். எண்ணூரில் திடீரென நான்கு கம்ப்யூட்டர்களைத் திருடி ராமானுஜ சேவையைச் சீர்குலைத்தார்கள். இன்றைய அரசியல் சூழலில், போலீஸ் திருடு போனதை மீட்டுக் கொடுக்குமா என்ன? அதனால் ஸ்வீட் கொடுத்து இந்தச் செய்தியை, கூடவே ராமானுஜ சேவையையும் இனிப்பு போல பரப்பினேன்" என்றவரிடம்,

"பாதுகாப்பான இடத்துல இந்த சேவையைச் செய்யலாமே" என்றோம். "ஆமாம் ஸார்! அதனால தான் இன்னொரு கிளையை, இருளர் குடும்பப் பிள்ளைகளுக்கு உதவ திருவள்ளூர் மாவட்டத்திலுள்ள பெரிய கரும்பு கிராமத்தில் தொடங்கி, அகஸ்தீஸ்வரர் கோயிலுக்குள், பிரகாரத்திலேயே கம்ப்யூட்டர் வெச்சு பயிற்சி கொடுக்க ஆரம்பிச்சுட்டேன். ஸ்ரீ முரளீதர சுவாமி தான் திறந்து வைத்தார். சர்ச்சுகளில், ஸ்டூடண்ட்ஸுக்கு நடத்தும் பைபிள் ஸ்டடி மாதிரி கோயில்களை இப்படிக் கூடப் பயன்படுத்தலாம்தானே. இதைப் பெரியவங்க யோசிக்கணும்" என்றவர், "பத்தாவது ஃபெயிலா? கவலை வேண்டாம். அடிமட்ட ஏழை மாணவனா? உடனே ஓடி வா. வாழக் கத்துத் தர்றோம்; கம்ப்யூட்டர் பயிற்சி கொடுத்து. இதை ராமானுஜர் பெயரால் அழைக்கிறோம்னு சொல்லுங்க ஸார்" என்றார். நம்மால் முடிந்த ஒரு 'சபாஷ்' சொல்லி கைகுலுக்கி வந்தோம். இதயத்தின் ஆசி அதில் ஒட்டிக் கொண்டிருந்தது.

– லதா



# அருள்வாக்கு

## கற்றல் - கற்பித்தல்

நன்றாகப் படித்தறிந்த ஒருத்தர் நாலு பேருக்காவது அதைப் படிப்பிக்காமல் போனார் என்று ஏற்படவே கூடாது. நன்றாகக் கற்று வித்வானாகிற எவரும் அப்புறம் தான் கற்றதை மற்றவர்களுக்கும் கற்றுக் கொடுத்து ப்ரசாரம் செய்தேயாக வேண்டுமென்பது ஆன்றோர் விதித்த விதி. தன்மட்டில் கற்றவனாயிருந்து பயனில்லை; கற்பிப்பவனாயிருந்து கல்வியின் பயன் வருங்கால சமுதாயத்துக்கும் போகும்படி செய்ய வேண்டும்.

மனுஷ்யனுடைய வாழ்க்கையில் ப்ரஹ்மசர்யம், கார்ஹஸ்த்யம், வானப்ரஸ்தம், ஸந்யாஸம் என்று நாலு ஆச்ரமம் உள்ளது என்றால், கல்வி கற்பிப்பதிலும், நாலு ஸ்டேஜ்கள் உண்டு. அதீதி, போதம், ஆசரணை, ப்ரசாரணை என்று இந்த நாலுக்குப் பேர். அதீதி என்றால் படிப்பது. முதலில் நன்றாய்ப் படிக்கவேண்டும். அப்புறம் போதம், அதாவது, படித்ததை நன்றாகப் புரிந்து கொண்டு அறிவிலே மேலும் புது அறிவு பெறுவது. மூன்றாவதாக ஆசரணை. முதலிரண்டும் இப்போதுங்கூடப் பல ஸ்கூல்களில் நடந்துவிடுகின்றன. ஆனால், இந்த மூன்றாவது விஷயத்தில்தான் கோளாறாக இருக்கிறது. அது என்ன? ஆசரணை என்றால் அறிவிலே இறக்கிக் கொண்டதை நம்முடைய வாழ்க்கையிலே இழைத்து, நடைமுறையில் நடத்திக் காட்டுவது என்று அர்த்தம். கற்றபின் அதற்குத் தக நிற்பது ஆசரணை.

இந்த மூன்றோடு மட்டும் வித்வானின் லக்ஷணத்தை முடிக்காமல், முடிவாக 'ப்ரசாரணை' என்றும் ஒரு நாலாவது லக்ஷணம் சொல்லியிருக்கிறது. இதுதான் தான் கற்ற கல்வி தன்னோடு போகாமல் அதை நாலுபேருக்குக் கற்றுக் கொடுப்பது. ப்ரசாரம் செய்வது ப்ரசாரணை.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

19 பாரதிபாலன்



# காற்று வரும்

கருகருவென்று இருட்டு.

திடுமென இருட்டு கவிழ்ந்துவிட்டாற்போல் இருந்தது. விர்விர்ரென்று வாடைக்காற்று வேறு வீசிற்று. அடித்து அடித்து ஆளை அசைக்கும் காற்று, நாலு கால் பாய்ச்சலில் ஓடிக் கொண்டிருந்தது. தென்னந்தோப்புக்குள் புகுந்து ஊளையிட்டுக் கொண்டிருந்தது. இருளில்தான் காற்றுக்குக் காலும் குரலும் நீண்டு விடுகின்றன.

பஞ்சவர்ணம் காலை மடக்கி நெஞ்சோடு அணைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். இந்த இருளும், குரலும் அவளுக்குப் புதிதில்லை. ஆனால், இப்படி தன்னந் தனியாக அறுவடை செய்த வயலில் வந்து கூடாரம் போட்டிருப்பதுதான் என்னவோ போல் இருந்தது. கிடையில் ஆடுகள் முட்டி மோதி முனங்கிக் கொண்டிருந்தன. வயலில் தூரோடு சேர்த்து வைக்கோல் தாளை அறுத்திருந்தனர். ஆனாலும் உறுத்தாமல் இல்லை. வைக்கோல் தாள் மட்டுமா? மனசும் உறுத்தத்தான் செய்கிறது.

புருஷனோடு சண்டை போட்டு, ஓடிவந்துவிட்ட அக்கா 'சொல்லிச் சொல்லி' அழுகிறாள். மம்பட்டியான் அரிக்கேன் விளக்கை வைத்துக்கொண்டு, கிடையில் கிடக்கும் ஆடுகளுக்கு குலைபோட்டுக் கொண்டிருந்தார். கூடாரத்துக்குப் பின்னால் ஆத்தா அடுப்பு மூட்டியிருந்தாள். சோளத் தட்டை, தென்னை மட்டை என்று போட்டுத் தீயைக் கொழுத்தினாள். தீ மடமடவென்று எழும்பவும் வெளிச்சம் விசிறி விசிறியடித்திற்று. வெளிச்சம் தணியவும் உடுத்தியிருந்த, சேலையை நின்றவாக்கிலே உருவிப் போட்டுவிட்டு, உட்கார்ந்து கொண்டாள். நாலு போணிச் செம்புத் தண்ணியை மேலுக்கு ஊற்றிக் கொண்டாள்.



# பருவம்!

உடுத்தியிருந்த சேலையையே உடுத்திக் கொண்டு கூடாரத்துக்கு வந்தாள்.

''போட்டுத் தின்னுங்கடீன்டாக்க...''

''அப்பன் வரட்டும்.''

மம்பட்டியான் அரிக்கேன் விளக்குடன் வந்தார்.

''சாப்புடுங்க தாயி.''

''ம். சாப்பிட்டு என்னத்தைக் கண்டுச்சு?''

''சாப்புடாம என்னத்தைக் காணப் போறோம். அம்புட்டுத்தேன் கழுதப்பய பொழப்பு...''

''படீர் படீர்ன்டு தார்க்குச்சியைக் கொண்டு அடிக்குறாம்பே. குடிச்சுப்பிட்டு எம்புட்டுக் கொண்டுழிக்க முங்குறே...'' மூத்த மகள் குரல் குலைந்திற்று. அவள்

நா தழுதழுத்திற்று.

''அங்குனக்குள்ள எங்கப்பே ஆத்தா கிட்டச் சொல்ல வேண்டியதுதானலா'' என்றாள் ஆத்தா.

''ஆமணக்கு!''

''காலையிலெ போயி என்னாண்டு கேப்பம்.''

''நா மாட்டேன். அந்தப் பயகிட்ட என்னாலெ இனி பொழப்பு பொழக்க முடியாது. பேசாம என்ன கொண்டு போட்டுப் பிடுங்க...''

''அடீயே! என்னா வவுசி பண்றவ. நாங்களே, ஊரான் தோட்டம் தொரவுண்டு, நாதியத்துப் போயி கெடக்கம்.''

''நானும் வந்து கெடக்கன்.''

''இது கொழுப்புலெ.''

''என்னிய கொல்லனுமுண்டாக்கா, அவிங்ககிட்ட விரட்டுங்க...''

''இதா சும்மா கெடங்க'' என்று அம்மாவை அதட்டினான் பஞ்சு. அக்காவும் வாயை மூடிக் கொண்டது. குச்சனூரில் இருந்து வாய்க்கால் கரை வழியே நடந்து வந்து விட்டாள் அக்கா.

அப்பன் தம்பிராம்பாறைப்பக்கம் விறகுக்குப் போகிறது. அதோ வெள்ளையாகத் தெரிகிறதே சங்கிலியண்ணன் கோவில். அதுதான் ஊர். இந்த ஆற்றைக் கடந்தால் போதும். ஆனால், இப்படி அசலூர் காட்டில் அனாதையாகக் கிடக்கும்படி இருக்கிறது. இன்னும் எத்தனை நாளைக்கோ? பஞ்சுக்கு அடிக்கடி செட்டியாரின் ஊரடித் தோட்டம்தான் நினைவுக்கு வரும். ஒவ்வொரு இடமும் அவள் மனசில் உருளும். கூடவே கோவிந்து நினைப்பும்!

இங்கு கோவிந்து வரவா முடியும்? நாலு தெரு தாண்ட வேண்டும். நாய்க் குரைப்பையும் மனுஷ விழிப்பையும் தாண்டி வர வேண்டும். ஒரு சுடை. அதைத் தாண்டி இரண்டு தோப்புகள், ஒரு வாய்க்கால், வாய்க்கால் கரை வழியே நடந்தால் சுடுகாடு. அதைக் கடந்தால் ஆறு. அகலமான ஆறு. சிறு ஆற்றுப்பாலம்! இந்த இருட்டில் அந்தப் பாலத்தில் நடக்கவா முடியும்? கால் இடறாமல், காற்றுத் தள்ளாமல் நடக்கவா முடியும்? அப்படியும் நான்கைந்து தடவை கோவிந்து வந்து விட்டது. நடுநிசியில் பேய் மாதிரி வந்து நிற்கிறது. வாடைக் காற்று கோணூசியாய்க் குத்துகிறது. பஞ்சுக்கு ஈரக்கொலை நடுங்கிற்று. அவன் கையைத் தொட்டு காலைத் தொட்டுத் தடுத்துவிட்டாள். 'வர வேண்டாம், இந்த இடத்தில் கால் வைக்க வேண்டாம்' என்று கதறியே விட்டாள்.




'தூம் தூம்' பட இயக்குநர் கே.மணிகண்டன் இப்போது 'சிக்குபுக்கு' படத்தை இயக்குகிறார். இதுவரை தமிழ்த் திரையுலகில் இடம் பெறாத ஆஸ்திரியா நாட்டின் அறியப் படாத பகுதிகளில் படப்பிடிப்பு நடக்கிறதாம் (கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட மாதிரி). இந்தப் படத்துக்காகவே பஞ்சாப் மாநிலத்து அமிர்தசரஸிலுள்ள நாடோடிப் பாடகர்களான 'வடாலி பிரதர்ஸ்'ஐ வரவழைத்து தமிழ்க் காதுகளுக்கு புதுசா பல்லே லக்கா படையலிடத் திட்டமாம். ('சிக்கு புக்கு' எக்ஸ்பிரஸ்ஸா பாசஞ்சரான்னு) வந்தால்தானே தெரியும். - 007

மூன்னு கிடக்க ஒண்ணு ஆச்சுனா? அதுவும் இந்த ஊரில் 'ஊர்க்காவல் கெட்டி. அங்கு மாதிரி இல்லை. ஏழு எட்டுத் தலைகள் கம்பும் சூரிக்கத்தியுமாய்த் திரிகின்றன. இனி ஊரடித் தோட்டத்துக்குப் போகவே முடியாதோ? செட்டியார் பிடிகொடுக்காமல் இருக்கிறார். அந்த பித்துக்காலன் வேறு விரட்டிக் கொண்டிருக்கிறான்.

**த**ம்புராம்பாறை, காட்டோடையில் மம்பட்டியான் விறகு பார்த்துக் கொண்டிருந்தார். வெயில் சுளீரென்று தாக்கிற்று. ஓடை மணல் தணலாக இருந்தது. புழுதி கொதித்தது. கால் வைக்க முடியவில்லை. பொசுக்கியது. மம்பட்டியான் உடம்பெல்லாம் வியர்வை ஓடிற்று. வேட்டியை தார் பாச்சிக் கட்டியிருந்தார். அவரால் அந்த வெயிலில் முடியவில்லை. நொச்சிச் செடி நிழலில் உட்கார்ந்து கொண்டார். சற்றுத் தள்ளி காட்டாமணக்கு வேலி. அந்த நிழலும் நீளமாய் ஓடிற்று. ஆனாலும் அனல் தாக்கத்துக்குக் குறைவில்லை. மாடுகளை மேய்ச்சலுக்கு விட்டு விட்டு மாட்டுக்காரனும் வந்து உட்கார்ந்து விட்டான்.

''ஒடப்பட்டியிலெ நம்ம பய ஒருத்தன் இருக்கான்.''

''ம்.''

''படிச்சவன்தான். சொன்னீங்களா தோது இருக்கானு பாக்கலாம்.''

''பாக்கலாம்'' என்றார் மம்பட்டியான்.

''ஒடச்சுப் பேசிடுறது நல்லது. எங்க சின்னயா மவன்தேன். சொசைட்டியிலெ சிமத்தண்ணி ஊத்துறான்.''

''அப்படியா?''

''நம்மள மாதிரி நோவு கெடையாது. வீடு வாசல்லாம் இருக்கு. மூணு பயக. வெடிப்பா இருப்பாங்க...''

''தோது எப்படி இருக்குனு பாக்கலாமுடா.''

''இழுக்கப்படாது. உண்டு இல்லைன்னு பேசிப்படணும். அவனும் அதப்

பாத்தானாக்க தலையை ஆட்டிப் போடு வான்.''

''எலெ. இங்க வெச்சுப் பேசுற பேச்சாடா?''

''ஒரு பேச்சுக்குச் சொன்னேன்.''

''ஊட்டுலெயும் கலக்கணுமில்லடா.''

''செய்யுங்கப்பு. அப்புறம் கூட ஒரு பேச்சு வந்துச்சு.''

மம்பட்டியான் மாட்டுக்காரனைப் பார்த்தார். அவன் ஆள்காட்டி விரலால் மணலைக் கீறிக் கொண்டிருந்தான். முன் முடி அவன் கண்ணை மறைத்திருந்தது. அதைச் சிலுப்பிக் கொண்டு அவரைப் பார்த்தான்.

''என்னடா அது?''

''ஆயிரம் பேசுவாங்கே, வாய்ப்பூட்டா போட முடியும்!''

''என்னாண்டு சொல்லுடா?''

''நம்ம ஐயா மவன்...''

''அதான் கொண்டு போட்டாங்களடா...''

''அது பெரியவருலெ. படிச்சவரு ஒருத்தர் இருக்காரே. என்னவோ பேருல்லெ சொல்லுவாக...''

''நடுவுள்ளவரு.''

''ம். அவுங்க மாடுகளையும் கூட நாதேன் ஓட்டியாறேன்.'

''என்னாண்டு சொல்லுடானாக்க...''

''இல்லெ. அவரு எப்ப புடிச்சும் ஊரடித் தோட்டத்தையே சுத்திக்கிட்டு இருந்தாருன்னாங்க...''

மம்பட்டியான் பார்வை பளபளப்பாயிற்று. கனிந்து குலையும் பார்வை. தகதகவென்று மாறிற்று. சற்று நகர்ந்து உட்கார்ந்து கொண்டார். வெட்டரிவாளின் கூர்மையை ஒரு தடவை சோதித்துக் கொண்டார்.

''அது ஒரு பேச்சாடா?''

''நாணா சொல்றேன்? பேச்சு வந்துச்சுங்குறேன்.''

''ஓம் பொஞ்சாதியப் பத்தியுங் கூடத் தாண்டா பேசுவாங்க.''

''அது உள்ளதுதான்!''

''பின்ன சொல்றவன்?''

''ஒரு பேச்சுக்கு சொன்னேப்புனா, நா குத்தமாவா சொன்னேன்? ஒங்க புள்ளைகளுக்குச் சொல்லவா வேணும்! எல்லாம் சூதானமா இருந்துக்கிடுங்க.''

''ஐயா மகனைப் பத்தி நமக்குத் தெரியாதா? அதான் சிறுகலெ இருந்து பாக்குதே.''

''பொழுது இறங்கிடுச்சு. அப்படியே இதுகளை ஓட்டிட்டுப் போறேன்'' என்று மாட்டுக்காரன் எழுந்து ஓடினான். சிதறிக் கிடந்த மாடுகளைக் குரல் கொடுத்து ஒன்று சேர்த்தான். மம்பட்டியான் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார். அவன் சொன்ன வார்த்தையையே திரும்பத் திரும்ப நினைத்துப் பார்த்தார். லேசான பயமும் பதற்றமும் கூடிற்று!

(காற்று வீசும்)

## பாத்துப் போங்க!

**"ஏன் உங்க பேராண்டி இவ்வளவு கறுப்பா பிறந்திருக்கான்!"**

**"என்ன பண்றது? தேனிலவுக்கு நெய்வேலிக்குப் போகாதீங்கன்னு தலைப்பாடா அடிச்சிக்கிட்டேன். கேட்டாங்களா?"**

**- ஏ. பாலகிருஷ்ணன்**



# உஸ்ஸ்! மெதுவா பேசு...

"தினமும் யோகா
பண்ணிட்டு வந்தா,
150வயசு வரைக்கும்
கூட வாழலாம்னு
யோகா கிளாஸ்ல
சொன்னாங்கடி...!"

"உஸ்ஸ்! மெதுவா
பேசு... உள்ள இருக்கற
என் மாமியார் காதுல
விழுந்துடப் போகுது!"

-கே. தண்டபாணி

# அமரர் கல்கி

புது மணம் புரிந்த மங்கை தன்னுடைய காதலன் அருகில் நெருங்கி வரும்போது ஆசையும் நாணமும் கலந்த தோற்றத்துடன் நிற்பது போல தங்க நிலாவில் தாஜ்மகால் என்னும் மோகினி நின்றாள். தும்பைப் பூவையொத்த வெண்மையும் மென்மையும் பொருந்திய டாக்கா மஸ்லினைக் கொண்டு மேனியை மட்டுமின்றி முகத்தையும் முக்கால் பங்கு மறைத்துக் கொண்டு அந்தப் புவனமோகினி சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். அவளை நாலு புறமும் காவல்கள் புரியும் தோழிப் பெண்களைப் போல் நெடிதுயர்ந்த ஸ்தம்பக் கோபுரங்கள் நாலு மூலையிலும் நிமிர்ந்து நின்றன. உலகம் தோன்றிய நாள் தொட்டுக் காதலர்களுக்கு வேதனை தருவதையே

நிழல் அந்தக் கற்பரசியின் மேனிக்கு ஒரு கவசமாகிக் காமுகனுடைய கரங்களை அப்பால் நிற்கச் செய்தது.

தொழிலாகக் கொண்ட பூரண சந்திரன், தனது கர்ம பலனை இந்தத் தாஜ்மகால் மோகினியிடம் அனுபவித்தான். தன்னுடைய ஆயிரமாயிரம் தங்கக் கரங்களினால் அந்த இணையில்லா அழகியைத் தழுவ ஆசைகொண்டு எவ்வளவோ முயன்றான். எனினும் தூய்மையே உருவெடுத்த அந்த நங்கையின் மேனியை அவனுடைய கரங்கள் தொட முடியாமல் அப்பால் நழுவி விழுந்தன. ஒருவேளை நாணம் காரணமாகத் தன்னைப் புறக்கணிக்கிறாளோ என்று எண்ணி இருள் நிழலைத் தன் உதவிக்கு அழைத்தான். ஆனால், நிழல் அந்தக் கற்பரசியின் மேனிக்கு ஒரு கவசமாகிக் காமுகனுடைய கரங்களை அப்பால் நிற்கச் செய்தது.

சந்திரனுக்குக் காதல் வேதனை பொறுக்க முடியாமற் போயிற்று. ''தாஜ்மகால் மோகினியினால் நிராகரிக்கப்பட்ட பிறகு இந்த ஜன்மம் என்னத்திற்கு?'' என்று நிராசை அடைந்தான். அவள் கண்ணுக்கெதிரே தன் உயிரை விட்டுவிட எண்ணி, அங்கிருந்த அழகிய நீர் ஓடையில் தலைகுப்புற விழுந்தான். அப்போதுதான் அந்த வெண்மலர்



# தங்க நிலாவில்

மேனியினாளுக்கு மனத்தில் இரக்கம் உண்டாயிற்று. சந்திரனைக் கரையேற்றத் தானும் ஓடையில் குதித்தாள். பளிங்குக் கல் ஓடையில் ஸ்படிகம் போலத் தெளிந்திருந்த நீரில் தங்கச் சந்திரனும் தாஜ்மகால் மோகினியும்




# தாஜ்மகால் மோகினி

ஒருவரையொருவர் கட்டித் தழுவிக் கொள்வதாக, காதலர் உலகத்தில் மெய்மறந்து சஞ்சரித்துக் கொண்டிருந்த சீதாவின் கற்பனைக் கண்களுக்குத் தோன்றியது. ஆஹா! எத்தனை காலமாக அந்தத் தாஜ்மகாலைப் பார்ப்பதற்கு அவள் ஆவல் கொண்டிருந்தாள்! எத்தனை முறை மானசீக யாத்திரை செய்து இங்கே அவள் வந்திருக்கிறாள்! அந்தக் கனவெல்லாம் இன்றைய தினம் உண்மையாகிவிட்டது. சீதாவின் வாழ்க்கையில் இது ஒரு மகத்தான நன்னாள் என்பதில் சந்தேகம் என்ன?

'அலை ஓசை' புதினத்திலிருந்து...

குறும்படம்

ஒரு பெரிய வயல் வெளி. அறுவடைக்குத் தயாராக நெற்கதிர்கள் விளைந்து தலை சாய்த்து நிற்கின்றன. சட்டென்று காட்சி மாறுகிறது. வயல்வெளி மறைந்து மிகப் பிரமாண்டமான, ராட்சஸக் கட்டிடம் ஒன்று இப்போது அந்த இடத்தில் முளைத் திருக்கிறது.

ஒரு வீட்டின் உள்பகுதி. நல்ல வசதியான வீடு என்பது பார்த்தாலே தெரிகிறது. மாடியில் இருந்து ஒரு பெண் படிக்கட்டுகளில் இறங்கி வருகிறாள். நடுத்தர வயது. கோட், ஸூட் என அதிநவீனமான உடை உடுத்தியிருக்கிறாள். ஹாலில் பத்து வயது மதிக்கத்தக்க ஒரு சிறுவன் ஸோபாவில் அமர்ந்திருக்கிறான். அவனுக்கு முன்னால் இருக்கும் லேப்டாப்பில் அவன் கை அலைந்து கொண்டிருக்கிறது.



* '2040க்குப் பிறகு' குறும்படத்

# ''இந்தச் சிவப்பு கேப்ஸ்யூல் பிரேக்ஃபாஸ்டுக்கு''

அந்தப் பெண் இறங்கிவந்து அவனுக்கு எதிரே உட்காருகிறாள். கால்களில் சாக்ஸை மாட்டியபடியே அவனிடம் கேட்கிறாள் : ''இன்னைக்கு என்ன எக்ஸாம்?''

''மேத்ஸ்.''

இப்போது அவன் கேட்கிறான். ''ஆபீஸுக்கா?''

''இல்ல. ஒரு கான்ஃபரன்ஸ். டெல்லி போறேன்.''

அந்தப் பெண் கிளம்புகிறாள்.

''மம்மி! எனக்கு பிரேக்ஃபாஸ்ட் எடுத்து வைக்க மறந்துட்டீங்களே!''

''ஓ, சாரி!'' என்றவள் ஃபிரிட்ஜைத் திறக்கிறாள்.

இப்போது டைனிங்டேபிளில் ஒரு தட்டு வைக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பெண்ணின் கை தட்டில் ஒரு மாத்திரையைப் போடுகிறது.

''இந்தச் சிவப்பு கேப்ஸ்யூல் பிரேக்ஃபாஸ்டுக்கு.''

தட்டில் மேலும் இரண்டு மாத்திரைகள் வந்து விழுகின்றன.

''இந்த வெள்ளை டேப்லெட்ஸ் லஞ்சுக்கு.''

அவ்வளவுதான். படம் முடிந்து விடுகிறது. திரையில் 'வேளாண்மையைக் காப்போம்' என்று பெரிதாக எழுத்தைப் போடுகிறார்கள். '2040-க்குப் பிறகு' என்ற குறும் படத்தில்தான் மேலே சொன்ன காட்சிகள் இடம்பெற்றிருக்கின்றன.

உண்மையில், விவசாயத்துக்கான முக்கியத்துவம் சமூகத்தில் மெல்ல மெல்லக் குறைந்து வரும் அபாயத்தை நம் தலையில் ஒரு தட்டுத் தட்டி உணர்த்தி விடுகிறது இந்தக் குறும்படம். ஐ.டி. தொழில், என்ஜினீயரிங், மருத்துவம்...



தற்போது இயக்குநர் செல்வபாரதியின் 'முரட்டுக்காளை' என்ற படத்தில் உதவி இயக்குநராகப் பணியாற்றுகிறார்.

''இப்படி ஒரு குறும்படத்தை எடுக்கணும்னு உங்களுக்கு எப்படித் தோணிச்சு?'' என்று கேட்டால் படபடவெனப் பேசுகிறார். ''இப்போ விளைச்சல் நிலங்களை எல்லாம் பிளாட் போட்டு விக்க ஆரம்பிச்சுட்டாங்க. இப்படியே

# ஏதாவது செய்யணும் ஸார்!

போனால்... ஏதாவது செய்யணும்னு நினைச்சேன். குறைந்தபட்சம் ஒரு கேள்வியையாவது துவக்கி வைப்போமேன்னுதான் இந்தப் படத்தை எடுத்தேன் ஸார்.

இந்தக் குறும்படத்துக்கு இருபதாயிரம் ரூபாய் செலவாகியிருக்கு. என் கைக்காசைப் போட்டுத்தான் படமெடுத்தேன். எல்லாம் ஒரு ஆத்மதிருப்திக்குத்தான்'' என்கிறார் செந்தில். இதில் நடித்திருக்கும் கவிதா யாதவும், சிறுவன் பண்பரசனும் கச்சிதமாக நடித்திருக்கிறார்கள். இந்தப் படத்தில் பின்னணி இசை கிடையாது. எஃபெக்ட்ஸை மட்டுமே பயன்படுத்தியிருக்கிறார்கள்.

இவ்வளவு அழுத்தமான செய்தியைச் சொல்லும் இந்த '2040-க்குப் பிறகு' குறும்படம், மொத்தமே ஒன்றரை நிமிடம்தான் ஓடுகிறது. ஒன்றரை நிமிடத்தில் உலகத்தரம்!

உள்ளிட்ட பல துறைகளுக்குக் கொடுக்கும் முன்னுரிமையை நாம் வேளாண்மைக்குக் கொடுப்பதில்லை.

இப்படியே போனால், பசியை மந்தமாக்கும் அல்லது உணவாக மாத்திரையையே சாப்பிட வேண்டிய கட்டாயத்துக்கு நாம் எல்லோருமே ஆளாக வேண்டியதுதான். விவசாயத்தின் மேல் மக்களுக்கு இருக்கும் அலட்சிய மனோபாவம், கடன் சுமையால் எலிக்கறி சாப்பிட வேண்டிய சூழலுக்குத் தள்ளப்படும் விவசாயி, விதர்பாவில் தற்கொலை செய்து கொண்ட விவசாயக் குடும்பங்கள், எதிர்காலம்... என்று பல கேள்விகளை இந்தப் படம் நமக்குள் எழுப்பி விடுகிறது.



* எம்.ஆர்.செந்தில்

இந்தக் குறும்படத்தை இயக்கியிருக்கும் இளைஞர் எம்.ஆர். செந்தில், சென்னை மடிப்பாக்கத்தில் இருக்கிறார்.

– பாலு சத்யா

# அக்கம் பக்கம்

எதிர்பார்த்ததுபோல மத்திய ஆட்சியில் முக்கியத்துவம் பெற முடியவில்லை என்பதில் சமாஜ்வாதி கட்சியின் அமர் சிங்குக்கு ரொம்ப ஏமாற்றம். மனிதர் தீவிர அரசியலிலிருந்து ஓய்வு பெறுவார் என்கிறார்கள். இன்னொரு பக்கம் அவருக்கு சிறுநீரகக் கோளாறு; எனவே உடம்பை ரொம்ப சிரமப்படுத்திக் கொள்ள வேண்டாம் என்று டாக்டர்கள் ஆலோசனை சொல்லி இருப்பதாகவும் தகவல்.

***(போன தபா, காங்கிரஸோட டீல் போட்டீங்க; இப்ப அவுங்க உங்களை டீல்ல விட்டுட்டாங்களே!)***



* மார்கண்டேய கட்ஜு

உத்தரப்பிரதேசம் மோரதாபாத் தொகுதியிலிருந்து எம்.பி.யாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள முன்னாள் கிரிக்கெட்டர் அசாருதீன், கொடுத்துள்ள வாக்குறுதியால் தொகுதியின் கிரிக்கெட் ரசிகர்கள் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். தன் பதவிக் காலம் முடிவதற்குள் மோரதாபாத்தில் ஒரு நல்ல கிரிக்கெட் ஸ்டேடியம் கட்டிக் கொடுப்பதும், அதில் 20- 20 மேட்ச் நடத்த ஏற்பாடு செய்வதும் அவரது வாக்குறுதிகள்.

***(அதுல மேட்ச் ஃபிக்சிங் இல்லாம பார்த்துக்கங்க அசாரு!)***

* சஞ்சய் தத்

**‘அரசியலே எனக்கு வேணாம்’**

மன்மோகன் சிங் அமைச்சரவையின் பதவி ஏற்பு முதல் எபிசோடில் பிரதமர் உட்பட பலரும் கடவுளின் பெயரால் பதவிப் பிரமாணம் எடுத்துக்கொள்ள, ஆறு பேர் மட்டும் உளமார உறுதி மொழி எடுத்துக் கொண்டார்கள். ப.சிதம்பரம், வீரப்பமொய்லி, சுஷில் குமார் ஷிண்டே, ஏ.கே.ஆண்டனி, ஜெயபால் ரெட்டி, சி.பி.ஜோஷி ஆகியோரே அந்த ஆறு பேர்.

***(நிஜமான பகுத்தறிவுக் காரங்கதான் பாய்க்காட் பண்ணிட்டாங்களே!)***

புதிய அமைச்சரவையில் ரொம்ப சீனியர் எஸ்.எம்.கிருஷ்ணாதான். அவருக்கு வயது 77. பிரதமர் கூட அவரைவிட ஐந்து மாதங்கள் இளையவர். 70 ப்ளஸ்

# பொண்டாட்டி பேச்சைக் கேளு...!

காரர்கள் பட்டியலில் பிரணாப் முகர்ஜி, வயலார் ரவி, முரளி தியோரா, பி.கே. ஹாண்டிக் ஆகியோர் இடம் பிடிக் கிறார்கள்.

*(ஏனோ ராகுல் பட்சி சிக்கமாட் டேங்குதே!)*

''**ம**னைவி பேச்சைக் கேட்டு அதன்படி நடந்தால் வாழ்க்கை மகிழ்ச்சி யாக இருக்கும்'' இப்படிச் சொன்னவர் உச்சநீதிமன்ற நீதிபதி மார்கண்டேய கட்ஜு. குடும்பத் தகராறு சம்பந்தப்பட்ட வழக்கில் நீதிபதி சொன்ன இந்த வார்த்தைகள் கோர்ட்டில் சலசலப்பை ஏற்படுத்தின.

*(ஆண்கள் பாதுகாப்பு இயக்கத்துக் காரங்க காதுல விழுதா?)*

**ச**த்யம் கம்ப்யூட்டர் நிறுவனத்தை வாங்கியபின், டெக் மஹிந்திரா நிர்வாகம் முதல் நடவடிக்கையாக ஆட்குறைப்பு செய்யப்போகிறது. ''பத்தாயிரம் பேர் உபரியாக இருக்கிறார்கள். முதலில் அவர்களை வெளியே அனுப்பினால்தான், கம்பெனியின் நஷ்டத்தைக் குறைத்து, ஒட்டுமொத்தமாக நாற்பதாயிரம் பேர் வேலை இழப்பதைத் தவிர்க்க முடியும்'' என்று சொல்கிறது புதிய நிர்வாகம்.

*(ராமலிங்க ராஜுகாரு! இல்லாத பத்தாயிரம் பேருக்கு நீங்க சம்பளம் போட்டுச் சுருட்டினீங்க! இப்போ நெசமாவே பத்தாயிரம் பேருக்கு வேலை போகப் போகுது!)*

**தி**டாலடியாக தேர்தலில் போட்டி யிடப் போவதாக அறிவித்து, சமாஜ்வாதி கட்சியில் பதவியைப் பெற்றார் சஞ்சய் தத். ஆனால், வாயை வைத்துக் கொண்டு சும்மா இருக்காமல், மாயாவதியைப் பற்றி கமெண்ட் அடிக்க, அது பெரும் சர்ச்சை யாகி, கடைசியில் மன்னிப்புக் கேட்கும் படியானது. இப்போது 'அரசியலே எனக்கு வேணாம்' என்று ஒதுங்கிவிட்டார் முன்னா பாய்.

*(பல அரசியல்வாதிகளுக்கு வாயில் தான் சனி!)*

**- பரத்ராம்**


● அசாருதீன்

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:** நீண்ட நாள் தடைப்பட்டு வந்த காரியம் தங்கு தடையின்றி நடக்கும். பண வசதி பெருகும். வேலையில் முன்னேற்றம் ஏற்படும். பழைய கடன்கள் தீரும். வராத நிலுவைகள் வந்து சேரும். மனக்குழப்பம் நீங்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். கல்வி வளம் மேலோங்கும். ராகு / கேது / சனி வழிபாடு சிறந்தது.

**ரிஷபம்:** வேலையில் இருந்து வந்த நெருக்கடி விலகும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். கடன் தொல்லை தீரும். புதிய வீடு / மனை வாங்க நல்ல காலம். செலவுகள் பயன் உள்ளதாக இருக்கும். நண்பர் / உறவினர்கள் மூலம் அனுகூலம் உண்டாகும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் ஏற்படும். தேர்வில் நல்ல மதிப்பெண்கள் பெறுவார்கள். சனி வழிபாடு சாலச் சிறந்தது.

**மிதுனம்:** குரு பார்வை ராசிக்கு இருப்பது நல்லது. மனத்துக்குப் புத்துணர்ச்சி ஏற்படும். குடும்ப வாழ்வில் அனுசரித்துப் போவது நல்லது. உடல் நிலையில் கவனம் தேவை. கடன் தொல்லையிலிருந்து விடுபடுவீர்கள். தேவை இல்லாத வைத்தியச் செலவு வந்து சேரும். பணம் விஷயத்தில் உஷார். வாகனத்தில் செல்லும்போது உஷார். கடன் சுமை தீரும். ராகு / கேது வழிபாடு செய்துவர நன்மை உண்டாகும்.

**கடகம்:** எதிர்ப்புத் தொல்லைகள் நீங்கும். கடன் சுமை தீரும். வழக்கு வெற்றி அளிக்கும். குடும்ப வாழ்வில் அனுசரித்துப் போவது நல்லது. மனக் குழப்பம் தீரும். வேலையில் இருந்து வந்த சங்கடங்கள் தீரும். பணக் கஷ்டம் இருக்காது. வியாபாரத்தில் முன்னேற்றமான சூழ்நிலை உருவாகும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். ராகு / கேது / குரு வழிபாடு செய்து வர சங்கடங்கள் விலகும்.

**சிம்மம்:** பண வசதிக்கான முன்னேற்றங்கள் தெரியும். மனக்குழப்பத்திலிருந்து விடு

**தஞ்சை பரத்வாஜ்**

படுவீர்கள். வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். குழந்தைகள் மூலம் மன சந்தோஷம் ஏற்படும். சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**கன்னி :** பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். வராத நிலுவைகள் வந்து சேரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். திடீர்ப் பிரயாணம் செல்ல நேரிடும். கல்வி வளம் மேலோங்கும். புதிய வீடு / மனை வாங்க உகந்த நேரம். செலவுகள் சுபமானதாக இருக்கும். கடன் தொல்லையிலிருந்து விடுபட நேரிடும். தேர்வில் அதிக மதிப்பெண்கள் கிடைக்கும். ராகு / கேது வழிபாடு செய்துவர சங்கடங்கள் நீங்கும்.

**துலாம்:** புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். கடன் தொல்லை தீரும். எதிரிகள் தொல்லை இருக்காது. நீண்டகாலம் முடிவு பெறாத வழக்கு முடிவுக்கு வரும். தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெறக் கூடும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். ராகு / கேது / குரு வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**விருச்சிகம் :** வீடு மாற்றம் ஏற்படும். வெளியூர்ப் பிரயாணம் போக வேண்டிய சூழ்நிலை ஏற்படும். நண்பர் / உறவினர்கள் மூலம் நன்மை உண்டாகும். குழந்தைகள் வழியில் மன மகிழ்ச்சி ஏற்படும். செலவுகள் பயன் உள்ளதாக இருக்கும். மறைமுக எதிர்ப்பு நிறைந்து இருக்கும். குரு / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**தனுசு :** குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்து அனுசரித்துப் போவது நல்லது. யாருக்கும் பெரும் தொகையைக் கடனாகக் கொடுக்கக் கூடாது. வாக்குவாதம் தவிர்க்கவும். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். ராகு / கேது / குரு வழிபாடு




செய்துவர நற்பலன் கிட்டும்.

**மகரம் :** நற்பலன் நிறைந்த வாரம். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் சீராகும். வீடு மாற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். குழந்தைகள் மூலம் மன சந்தோஷம் உண்டாகும். சனி / ராகு / கேது வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீரும்.

**கும்பம்:** திடீர்ப் பிரயாணம் செய்ய வேண்டி இருக்கும். வரவுக்கு மீறிய செலவுகள் வந்து சேரும். குழந்தைகள் மூலம் அதிகப்படியான செலவுகள் ஏற்படும். உடல் ஆரோக்கியம் சீராகும். வீடு மாற்றம் உண்டாகும். சனி / குரு வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**மீனம்:** மன நிறைவான வாரம். பண வசதிக்குக் குறைவு இல்லை. இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். கடன் பிரச்னை தீரும். திருமணக் காரியம் கைகூடும். வழக்கு வெற்றி பெறும். சொத்துகள் வாங்கும் தருணம். மன பயம் விலகும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். ராகு / கேது வழிபட்டு வர நற்பலனை அளிக்கும்.

கலக்க வருதுப்பா

# கல்கி

கெட் ரெடி!
கெட் ரெடி!
கெட் ரெடி!

## உங்க மாவட்டத்துல
## 'சூப்பர்' எதுங்க? 'வேஸ்ட்' எதுங்க?

- நீங்க ஜாலியா ரவுண்டடிக்கிற டூரிஸ்ட் ஸ்பாட் எது?
- பார்த்ததும் பரவசமா கும்பிடு போடற கோயில் எங்கெல்லாம் இருக்கு?
- அசத்தலா போட்டுக்கிட்டு அதிரடி பண்ண சேலை.ஜீன்ஸ் சுத்துவட்டாரத்துல எங்கே பெஸ்ட்டா கிடைக்கும்?
- உங்க மாவட்டத்தோட தலை போற பிரச்னை எதுங்க? எப்படித் தீர்க்கலாம்ன்னு நினைக்கறீங்க?
- மிஸ்டர் மாவட்டம் யாருங்க! என்ன காரணமுங்க?
- கலக்கலா கதை எழுதுவீங்களா? அசத்தலா கவிதை வருமா?
- லொள்ளு பண்ற 'ஜோக்ஸ்' கைவசம் இருக்கா?

-'ஆமா'ன்னா உடனே 'கல்கி'க்குத் தட்டி விடுங்க!



# நீங்க ச்சும்மா கோடு போடுங்க... நாங்க உடனே ரோடு போடறோம்!

**ஆ**மாம்! உங்கள் மாவட்டத்துக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்?

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).

## வர்றோம்...

- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- மாவட்டத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 15.06.09**

**கலக்க வருதுப்பா கல்கி**

**உதகை மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்

☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்



47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

# 70 முதல் 7 வரை - II

டி.வி.யில் சினிமா பார்ப்பதில் ஒரு பெரிய வசதி இருக்கிறது. பத்து நிமிஷங் களுக்குள் படம் மனசைக் கவரவில்லை என்றால் டீ.வி.யை அணைத்துவிட்டு வேறு உபயோகமான வேலையில் ஈடுபட லாம். தியேட்டருக்குப் போனால் பிடிக் கிறதோ இல்லையோ, காசைக் கொடுத்து விட்டதற்காக தேள் கொட்டுவதை சகித்துக் கொள்ளத்தான் வேண்டும்! சமீபத்தில் Dead man walking என்று டீ.வி.யில் ஒரு சினிமா கடைசி வரை பார்த்தேன். 'மரண தண்டனை விதிப் பது பெரும் தவறு; மனித உயிரைப் பறிக்க மனிதனுக்கு உரிமை இல்லை' என்று வாதாடுகிற ஓர் உண் மைக் கதை. மையக் கருத்து எனக்கு உடன் பாடு இல்லை என் றாலும், திரைப்படம் என்னை உருக வைத்தது நிஜம். நடிப்பு, டைரக் ஷன், ஒளிப்பதிவு எல் லாமே சிறப்பு.


'Dead Man Walking' படத்தில்...




படம் பார்க்கும் போதே, ராஜாஜிக்கும் ஜஸ்டிஸ் மகராஜனுக் கும் இடையில் நடந்த ஓர் உரையாடல் என் நினைவுக்கு வந்தது. ''சாட்சியங்கள் வலுவாக இருந்து, குற்றம் சந்தேகமின்றி நிருபணமானாலும் கூட, குற்றவாளிக்கு சட்டப்படி மரணதண்டனை விதிப்பது எனக்கு ரொம்ப மனக் கஷ்டத்தை அளிக் கத்தான் செய்கிறது'' என்றார் ஜஸ்டிஸ் மகராஜன்.

ராஜாஜியின் பதில்: ''நீங்கள் குற்ற வாளிக் கூண்டில் நிற்பவனை மட்டும் பார்க்கிறீர்கள். அது தவறு. அவனால் திட்ட மிட்டு கொடூரமாகக் கொல்லப்பட்ட நபரையும், அந்தக் கணத்தில் அந்த நபர் அனுபவித்த அதிர்ச்சி, பீதி போன்ற மன நிலைகளையும், அந்த நபரை இழந்ததால் அவர் குடும்பம் அடைந்துள்ள பலவித மான துன்பங்களையும் எண்ணிப் பார்க்க வேண்டும். அப்போது மரண தண்டனை விதிப்பது மனச் சங்கடத்தை அளிக்காது. குற்றத்துக்கு ஏற்ற தண்டனை இல்லை என்றால் குற்றம் புரிய பலருக்கும் துணிவு பிறக்கும். குற்றவாளிகளின் எண்ணிக்கை அதிகரிக்கும்.''

மகராஜன் மௌனமாகத் தலை யசைத்து ஒப்புதல் தெரிவித்தார்.

ராஜாஜிக்கு இதுபோன்ற ஆணித்தர மான அபிப்பிராயங்கள் பல உண்டு. ஜனநாயகப் போர்வையில் பதவி ஆசையும் லஞ்ச லாவண்யங்களும் பெருகுவது கண்டு அவர் தூய உள்ளம் துவண்டது. இந்தப் போக்கை எப்படி திருத்தி அமைப் பது என்ற நோக்கில் சதாசிவத்தினிடம் ஒரு நாள் பேசிக் கொண்டிருந்தபோது,

''இதற்காக, நான் நல்லதையே செய்யும் ஒரு சர்வாதிகாரியாக விளங்குவதைக் கூட பொருட்படுத்தமாட்டேன்'' (I wouldn't mind being a benevolent dictator) என்றார்!

கல்கி ராஜேந்திரன்

# மேதைகள் சந்தித்தால்...

ராஜாஜியின் தனித்தன்மை வாய்ந்த சிந்தனைகளில் இன்னொன்று, பெரும்பான்மையினரின் முடிவு என்பதாலேயே அது சரியான முடிவாக இருக்க வேண்டுமென்பதில்லை; பெரும்பான்மை பலமே பல தவறான முடிவுகளுக்குத் துணை போகக் கூடும் என்பது. இது தொடர்பான ஒரு ரசமான சம்பவம் உண்டு.

நேருஜிக்கும் சர்தார் பட்டேலுக்கும் இடையே அடிக்கடி கருத்து வேற்றுமை ஏற்படும். அப்போதெல்லாம் கவர்னர் ஜெனரல் ராஜாஜி, அவர்களிடையே பாலமாக இருந்து இணைப்பு ஏற்படுத்தித் தருவார். கவர்னர் ஜெனரல் பதவியைத் துறந்து ராஜாஜி சென்னை திரும்பிய பிறகும் பிரதமர் நேருஜிக்கு அவரது ஆலோசனைகள் அவ்வப்போது தேவைப்பட்டன. அதனால் அவரைத் திரும்பவும் தில்லிக்கு அழைத்து, இலாக்கா பொறுப்பு இல்லாத அமைச்சராக்கினார் (Minister without portfolio). இதன் விளைவு என்னவென்றால், எந்த அமைச்சகத்தில் மந்திரிக்கு எந்த ஒரு பிரச்னையில் முடிவெடுக்க முடியாமல் தயக்கம் ஏற்பட்டாலும் அந்தக் கோப்பை அவர், இலாக்கா பொறுப்பற்ற மந்திரியான ராஜாஜியிடம் அனுப்பி விடுவார்! இலாக்கா இல்லாத மந்திரிக்கு எல்லாத் துறைகளிலிருந்தும் ஃபைல்கள் வந்து குவிந்தன!

ஒரு சமயம் நேருஜி ஓர் அயல்நாட்டுப் பிரச்னையை விவாதிக்கத் தமது இலாக்கா அதிகாரிகளை அழைத்தார். அந்தக் கூட்டத்துக்கு ராஜாஜியும் அழைக்கப்பட்டுச் சென்றிருந்தார். பிரச்னை குறித்து நேருஜி தமது கருத்தைத் தெரிவித்தார். பின்னர், ராஜாஜியின் அபிப்பிராயத்தைக் கேட்டார். ராஜாஜி, நேருஜியின் கருத்தை ஏற்கவில்லை. முற்றிலும் மாறான ஒரு செயல்திட்டத்தைச் சிபாரிசு செய்தார். நேருஜி சில வினாடிகள் யோசித்து விட்டு, அதிகாரிகள் பக்கம் திரும்பினார். அவர்கள் எல்லோரும் பிரதமமந்திரியின் கருத்தையே ஆமோதித்தனர். நேருஜி புன்னகை புரிந்து, ராஜாஜியைப் பார்த்து, "Rajaji, majority

* ஜஸ்டிஸ் மகராஜன்



seems to be on my side" (பெரும்பான்மைக் கருத்து என் பக்கம் இருப்பதுபோல் தோன்றுகிறதே) என்றார். ராஜாஜி பதிலளித்தார்: "Yes, Jawaharlal; but common sense is on my side!" (ஆமாம், ஜவாஹர்லால்; ஆனால் யதார்த்த அறிவு என் பக்கம் இருக்கிறது!) நேருஜி பெரிதாகச் சிரித்துவிட்டு, ராஜாஜியின் கருத்தையே ஏற்றுக்கொண்டு செயல்பட்டார்.

இந்தச் சம்பவத்தின்போது நான் உடனிருந்திருக்க முடியாதுதான். ஆனால், பம்பாயிலிருந்து வெளிவரும் Midday என்ற பத்திரிகையில் ராஜாஜி பற்றிய ஒரு கட்டுரையின் இடையில் இந்த உரையாடல் விவரிக்கப்பட்டிருந்ததை என்னால் என்றும் மறக்க முடியாது. அதில் ராஜாஜி முத்திரை அழுத்தமாகப் பதிந்திருப்பதை மறுக்கவும் முடியாது.* பின் நாட்களில் நாட்டு நலன் கருதி சுதந்திரா கட்சி தொடங்கி, காங்கிரஸையும் நேருஜியையும் ராஜாஜி எதிர்க்க நேர்ந்தபோதிலும், அவ்விருவரிடையே நிலவிய பந்த பாசம் அளவிட முடியாதது.



**"பெரும்பான்மைக் கருத்து என் பக்கம் இருப்பது போல் தோன்றுகிறதே"**

இதேபோல் காமராஜரும் ராஜாஜியும் பல்வேறு கருத்து மாறுபாடுகளுக்கிடையிலும் நண்பர்களாகவே விளங்கினார்கள். பிரதமர் இந்திரா காந்தியின் யதேச்சதிகாரப் போக்கு பிடிக்காததால் காங்கிரஸ் பிளவுபட்டு, பழைய காங்கிரஸ் (காமராஜ் காங்கிரஸ்) என்றும் இந்திரா காங்கிரஸ் என்றும் உருவானது சமீப சரித்திரம். சுதந்திரா கட்சி, பழைய காங்கிரஸுடனும் வேறு பல கட்சிகளுடனும் கூட்டணி அமைத்து 1971ல் நாடாளுமன்றத் தேர்தலைச் சந்தித்தது. கூடவே தமிழக சட்டமன்றத்துக்கும் தேர்தல் நடந்தது. தி.மு.க., இ.காங்கிரஸை ஆதரிக்க, தேர்தல் பிரசாரத்தில் ராஜாஜியும் காமராஜரும் இணைந்தனர். அந்தக் காலகட்டத்தில் ஒரு முறை சதாசிவத்தின் இல்லத்தில் காமராஜரும் ராஜாஜியும் சந்தித்தார்கள். பேச்சினிடையே ராஜாஜி, வருத்தம் தோய்ந்த குரலில் சொன்னார்: ''காமராஜ், நீங்க வாழ்க்கையில் ஒரு பெரிய தப்பு பண்ணினீங்க; நானும் என் வாழ்நாளில் ஒரு பெரிய தப்பு செய்து விட்டேன். நீங்க அந்த அம்மாவைப் (இந்திரா காந்தி) பிரதமராக்கினீங்க; நான், தி.மு.க. தமிழகத்தில் பதவியில் அமர ரொம்பப் பாடுபட்டேன்...''

இருவருமே தவறு செய்கிறோம் என்று நினைத்துச் செயல்படவில்லைதான். நல்லது நடக்கும் என்று நம்பியே செயல்பட்டு ஏமாற்றத்துக்கு ஆளாகியிருந்தார்கள். இருப்பினும் அப்படி சமாதானம் சொல்லிக் கொண்டிராமல் தவறான கணிப்பை தவறு என்று ஒப்புக்கொள்ளும் துணிவு ராஜாஜிக்கு இருந்தது. இந்த உரையாடல் நடந்து சிறிது காலத்தில் கருணாநிதி மது விலக்கை ரத்து செய்து ராஜாஜியின் உள்ளத்தை நோக அடித்தார். மேலும் சில ஆண்டுகள் சென்று இந்திரா காந்தி எமெர்ஜென்ஸி கொண்டு வந்து காமராஜரின் இதயத்தை நொறுக்கினார்.

---

* ராஜ்மோகன் காந்தியும் தமது 'ராஜாஜி-வாழ்க்கை வரலாறு' நூலில் இந்தச் சம்பவத்தை எழுதியுள்ளார்.

ஆழ்ந்த சிந்தனைக்குப்பின் உறுதியான முடிவெடுப்பவர்தான் ராஜாஜி என்றாலும் உடும்புப் பிடியாக ஒரே கருத்தைப் பற்றிக் கொண்டிருப்பவரும் அல்ல. தமக்கு சமதையானவர்களுடன் விவாதங்களை வரவேற்பார். அதன் முடிவில் தமது அபிப்பிராயங்களை அவர் மாற்றிக் கொண்ட தருணங்களும் பல உண்டு. இது அறிவாற்றலின் வளர்ச்சிக்கு அடையாளம் என்றும், தவறு என்று தெரிந்த பிறகும் பிடிவாதமாக ஒரு கருத்தில் நங்கூரம் பாய்ச்சி நிற்பது சிந்தனையின் தேக்க நிலையை உணர்த்தும் என்றும் அவர் விளக்கமளித்திருக்கிறார்.

சென்னை ராஜதானிக்கு இரண்டாவது முறையாக ராஜாஜி முதல் மந்திரியாக விளங்கிய சமயம், போலீஸ் துறையில் வேலை நிறுத்தம் என்ற பேச்சு அடிபட்டது. போலீஸ் உயர் அதிகாரிகள், காவல் துறையில் இதை அனுமதிக்கவே கூடாது என்றும் கடுமையான நடவடிக்கை தேவை என்றும் முதல் மந்திரியிடம் பேசியிருந்தார்கள். அன்று மாலை 'கல்கி' ராஜாஜியைச் சந்தித்தார். ''போலீஸில் வேலை நிறுத்தம் என்பது பெரும் தவறுதான்; ஆனால் அவர்கள் ஏன் வேலை நிறுத்தம் செய்ய நினைக்கிறார்கள் என்பதையும் கவனிக்க வேண்டும். போலீஸுக்கு தாராளச் சம்பளமும் இதர சலுகைகளும் வழங்க வேண்டும்; அதன் பிறகும் அவர்கள் லஞ்ச-ஊழல் போன்றவற்றில் ஈடுபட்டால் கடுமையான நடவடிக்கை எடுப்பது நியாயமாகவும் இருக்கும்'' என்பது 'கல்கி'யின் கருத்தாக இருந்தது. மறுநாள் காலை ஸ்டிரைக் வாபஸ் பெறப்பட்டதாகவும் போலீஸாரின் கோரிக்கைகளில் முக்கியமான சில, அரசாங்கத்தால் ஏற்கப்பட்டதாகவும் செய்தி வெளியாயிற்று!



**"ஆமாம், ஜவாஹர்லால்; ஆனால் யதார்த்த அறிவு என் பக்கம் இருக்கிறது!"**

சிக்கலான பிரச்னையில் சாணக்கியத்துடன் சரியான முடிவெடுப்பதுதான் ஓர் அரசியல்வாதியை ராஜதந்திரி (Statesman) என்ற நிலைக்கு உயர்த்தும். நாடு சுதந்திரம் பெற்ற பிறகு ஹைதராபாத் நைஜாம், ரஸாக்கர்களின்* ஆளுமையில் சிக்கி, இந்தியாவுடன் இணைய மறுத்து வந்தார். சுதேச சமஸ்தானங்களை இந்தியாவுடன் இணைப்பதில் பெரு வெற்றி பெற்று வந்த சர்தார் பட்டேல், ஹைதராபாத்துக்குப் படைகளை அனுப்ப வேண்டுமென்றார். நேருஜியோ, ''அது ஆக்கிரமிப்பாகக் கருதப்படும்; உலக நாடுகளின் கண்டனத்துக்கு இந்தியா ஆளாகும்'' என்று கூறித் தயங்கினார். இருவருடனும் கலந்தாலோசித்த கவர்னர் ஜெனரல் ராஜாஜி, ''படையெடுப்பு என்று சொல்லி ரஸாக்கர்களுக்கு ஏன் அவ்வளவு முக்கியத்துவம் தருகிறீர்கள்? 'போலீஸ் நடவடிக்கை' என்ற பெயரில் ராணுவத்தை அனுப்புங்கள்'' என்றார். நாலே நாட்களில் காரியம் முடிந்தது. உலக அரங்கில் ஒரு முணுமுணுப்பு கூட எழவில்லை! 'Police Action' என்ற வார்த்தைகள் அதைத் தவிர்த்து விட்டன.

**(அடுத்த வாரம்: எழுத்து தெய்வம்; எழுதுகோல் தெய்வம்!)**

* ரஸாக்கர்கள் : ஒரு பயங்கரவாத அமைப்பு



''போர்க்களத்தில் என்ன நடந்தது?''

''யானை, குதிரையெல்லாம் நடந்தது. மன்னர் மட்டும் ஓடினார் ராணி!''



''அவையோரே! நாட்டில் இன்றைய நற்செய்தி என்னவோ?''

''தாங்கள் போருக்குப் போவதாக வதந்தி கிளம்பியுள்ளது மன்னா!''

- சிக்ஸ் முகம்

# முதுகில் முதலுதவிப் பெட்டி!



''மன்னர் முதுகில என்ன தொங்குது?''

''முதலுதவிப் பெட்டி!''

''மன்னா! அண்டை நாட்டு மன்னன் நமது அந்தப்புரத்தைக் கைப்பற்றி விட்டான்!''

''அப்பாடா நான் தப்பித்தேன்!''

- அம்பை தேவா





# இப்படியே தொடர்வதா யதார்த்தம்?

ச. விசயலட்சுமி

படுக்கை அறையின் மூலையில்
சிதறிக்கிடக்கும்
குப்பைகளில் சோம்பல் வழியும்.
ஓடஓட காற்றை விரட்டும் மின்விசிறியை
நாடாது மனம் குளிரூட்டிக்குத் தாவும்.
சரிவர மூடப்படாத குழாயின்
சலசலப்பைப் புறக்கணிக்கும் காது.
அக்கம்பக்க நடப்புகள் அறியாமல்
கீழ்வீட்டில் குழந்தை பிறந்திருக்குமென
கேட்கத் துணிந்தபோது,
பிறந்து ஒரு வாரமானதை அறிவோம்.
நமக்குப் பழகிவிட்டிருக்கின்றன
மூடப்பட்ட கதவுகளும் சன்னல்களும்.
தொலைக்காட்சி செய்திகளில்
அடுக்கிவைக்கப்பட்ட உடல்கள்
கிழிந்து தொங்கும் சதைகள்
உணவுக்கு நீளும் கரங்கள்
சலனமற்ற பார்வையோடு
உண்டு முடித்து உதறிவிரிக்கிறோம்
உறங்குவதற்கான படுக்கையை.





# வாழ்வின் ரிதம்!



*பெயர் :* மா.முத்துக்கிருஷ்ணன்

*இடம் :* சென்னை ஈக்காடுதாங்கல்

*முறையான கலைப்படிப்பு :* பரம்பரை அனுபவம்

*தொழில் :* கற்கள் பதித்து தங்க முலாம் பூசி, எதிரே தெய்வங்கள் உயிர்பெற்று வந்ததாய் காட்சிப்படுத்தும் தஞ்சாவூர் பாணி ஓவியங்கள்

*பொழுதுபோக்கு :* கலையே பொழுது போக்காக வாய்த்தது வாழ்வின் வரம்

*தனிச்சிறப்பு :* நவீன ஓவியத்தையும் தஞ்சாவூர் பாணிக்கு மாற்றுவது.

*சமீபத்திய சாதனை :* தஞ்சாவூர் ஓவிய பாணியில் திருப்பாவையின் 30 பாடல் களையும் 450 கதாபாத்திரங்களையும் ஒரே படத்தில் வரும்படி செய்தது.

*விருப்பம் :* கலை ஆர்வம் உள்ள வருக்கு இதைக் கற்றுக் கொடுப்பது

*கலை பற்றி :* அது நம் முன்னோர்கள் வழங்கிய வாழ்வின் ரிதம்.

- அமிர்தா



# காதலுக்கு முன்... சில டிப்ஸ்!

காதலோ நட்போ 'கடலை'யில்தானே ஆரம்பிக்க வேண்டும். நெருங்கிப்போய் பேச்சுக் கொடுத்தால் நாக்கு சுருங்கிப்போய் தொண்டைக்குள் ஒட்டிக்கொள்கிறதே... என்ன செய்வதென்று யோசிக்கிறீர்களா? பேசுவதற்கு ஆசைப்பட்டால் முதலில் காதுகொடுத்துக் கேட்பதற்குத் தயாராக இருங்கள். ஆணோ பெண்ணோ எல்லோருக்குமே தாங்கள் பேசுவதை யாராவது கேட்கவேண்டும் என்ற ஆசை கண்டிப்பாக இருக்கும். பேச ஆரம்பிக்கும்போதே உங்கள் சோகக் கதைகளைச் சொல்லி புலம்பியழக்கூடாது. பொதுவான விஷயங்களிலிருந்தே உங்கள் பேச்சைத் தொடங்குங்கள். சந்திப்பின்போது என்னென்ன பேச வேண்டுமென்று முன்கூட்டியே திட்டம்போடுவதையும் தவிர்த்துவிடுங்கள். எந்தெந்த நேரத்தில் எதைப்பற்றி கதைக்க வேண்டுமென்று சூழல்தான் தீர்மானிக்கிறது. அனைத்துக்கும் மேலாக நீங்கள் அனைவராலும் விரும்பப்படுகின்ற இளைஞன் என்று மனோதிடம்

• ஸாந்த் •

கொள்ளுங்கள். இந்த வருடம் நிச்சயம் ஒரு காதல்தேவதை குண்டும் குழியுமான சென்னைச்சாலைகளில் உங்களின் கரம் பிடித்து காலார நடப்பாள். நம்புங்கள் ஸார்! இந்த வருஷம் இல்லேன்னா அடுத்த வருஷம். www.ezinearticles.com

### முத்தம் - சில வரையறைகள்

அல்ஜீப்ரா - வகுத்தால் மீதி வராத இரண்டு

ஜியோமெட்ரி - இரண்டு நேர்க்கோடுகளுக்கு இடைப்பட்ட மிகக்குறைவான தொலைவு

வேதியியல் - இரண்டு இதயங்கள் இணைவதால் உண்டாகும் எதிர்விளைவு

விலங்கியல் - உமிழ்நீரிலுள்ள பாக்டீரியாக்கள் இடம் மாறுவது

வணிகவியல் - திரும்பக் கிடைக்கையில் லாபம் கொடுக்கின்ற கடன்

பொருளாதாரம் - அளிப்பதைவிடவும் தேவை அதிகம்

ஆங்கிலம்- இரண்டு வார்த்தைகளை இணைக்கும் கன்ஜங்ஷன்.

www.basicjokes.com

### அழுக்கு ஜீன்ஸ் ஆனந்த்

காலேஜ் ஹாஸ்டலில் தங்கிப் படிக்கும் அழுக்கு ஜீன்ஸ் ஆனந்துக்கு இந்தத் தடவையும் மாதக்கடைசியில் செலவுக்குப் பணம் இல்லாமல் போய்விட்டது.

வழக்கம்போல அம்மாவுக்கு ஒரு போன். 'அவசரமாக ஆயிரம் ரூபாய் அனுப்பி வையுங்க மம்மி. உடனே ஒரு புக் வாங்கணும்.'

'கண்டிப்பா அனுப்பிவைக்கிறேன் செல்லம். உடம்பு நல்லா இருக்கா? போன மாசம் வீட்டுக்கு வந்தப்ப கிளாஸ் நோட்புக்கை மறந்து வைச்சுட்ட. அதையும் சேர்த்து அனுப்பி வைச்சுடறேன்.'

'ம்...அதையும் அனுப்பிவையுங்க'

அன்றிரவு அம்மாவிடம் அப்பா கேட்டார்.

'எவ்வளவு பணம் அனுப்பிச்ச?'

'ஆறாயிரம் ரூபாய்...'

'அவ்வளவு பணம் அவனுக்கு எதுக்கு?'

'புக் வாங்க ஆயிரம் ரூபாய் கேட்டான். அதுக்காக ஆயிரம் ரூபாய்க்கு செக் எழுதி ஒரு கவர்ல வைச்சு அனுப்பியிருக்கேன். கூடவே அவன் கிளாஸ் நோட்புக்ல ஐயாயிரத்துக்கு ஒரு செக் வைச்சிருக்கேன். சரி அடுத்த மாதம் பணம் கேட்கும்போது சொல்லிக்கலாம்.' -www.unwind.com

### ஞாபகம் வருதே...ஞாபகம் வருதே...

'போன வருஷம் சுவரோடு முட்டி மண்டை உடையாத குறையாகத்தான் படித்தேன். அவ்வப்போது நடந்த இடைத் தேர்வுகளிலும் நன்றாகத்தான் எழுதினேன். நம்பிக்கையோடு பரீட்சையில்போய் உட்கார்ந்தால் கடைசியில் ஒன்றும் ஞாபகம் வராமல் கழுத்தறுத்துவிட்டதே' என்பதுதான் உங்கள் கவலையா? படித்த ஒரு மணிநேரம் கழித்தபின்பு மீண்டும் நினைவுபடுத்திப் பாருங்கள். மூன்று மணிநேரம் கழித்து மீண்டும் ஒரு தடவை. ஆறு மணி நேரத்துக்குப் பின் இன்னொருமுறை. அப்பாடி.... வேலை முடிந்தது என்று அத்தோடு ஓரம்கட்டிவிடவேண்டாம். மறுநாளும் இரண்டு, மூன்று தடவைகள் நினைவுக்குக் கொண்டுவந்து பாருங்கள். பின்பு நேரம் வாய்க்கும்போதெல்லாம்.

இப்படி படிப்பதை நினைவுக்குக் கொண்டுவந்து பழகினால் அப்புறம் நீங்களே மறக்க நினைத்தாலும் முடியாது. ஆட்டோகிராப் பாட்டை ஃபாஸ்ட் பீட்டில் பாடி மகிழலாம்....

www.studyhall.com

பளாக் அண்ட் வொயிட்

கதைகள்-8

அருந்தவம் வீட்டுக்குள்ளிருந்து வெளியே வந்து பார்த்தாள். நல்ல வெயில் கொளுத்திக் கொண்டிருந்தது. மணி தோராயமாக பன்னிரண்டு இருக்கும் போல் தெரிந்தது. நிதானமாக முகம் கழுவி.. பவுடர் அடித்து... பொட்டு வைத்து... புதுப்புடைவை கட்டிக் கொண்டு கிருஷ்ணவேணி வீட்டுக்குக் கிளம்பினாள். கிருஷ்ணவேணி வீடு தூரத்தில் இல்லை. அருந்தவம் வீட்டுத் தோட்டத்தை ஒட்டி பக்கத்திலேயே இருந்தது. அதுவும் தோட்டம் வழியே போனால் போதும்.

அருந்தவம் கிருஷ்ணவேணி வீட்டின் வாசலில் நின்றிருந்தாள்.

''ஏம்மா... கிருஷ்ணவேணி... இன்னுமா கெளம்பற..?''

அருந்தவம் குரல் கேட்டதும் அவளுக்காகவே காத்துக் கொண்டிருந்தவளைப்போல சிரித்தபடி வெளியே வந்தாள் கிருஷ்ணவேணி. நல்ல அழகு. 'துறு... துறு'வென்று... களையான முகம். பாவாடை தாவணியில் ஒரு தேவதையைப் போல் இருந்தாள். அருந்தவத்துக்குக் கிருஷ்ணவேணியை ரொம்பவும் பிடிக்கும். அவள் எப்போது சினிமா பார்க்கப் போவதாய் இருந்தாலும் தனியாக ஒருநாளும் போனதில்லை. கிருஷ்ணவேணியின் துணை வேண்டும் அவளுக்கு.

''இன்னும் மணியாகலையே பெரியம்மா. அதுக்குள்ளவா போகணும்?''



# கண்ணம்மை டாக்கீஸ்

பாரதி வசந்தன்

''இப்ப சித்திரை மாசம்மா. வெயில் வேற அதிகமா இருக்கு. பொறுமையா நடந்து போனோம்னா சரியா இருக்கும்.''

கிருஷ்ணவேணி வீட்டுக்குள் போய் தன் அம்மாவிடம் சொல்லிவிட்டு உற்சாகத் தோடு வந்தாள்.

முதலியார்பேட்டை கடலூர் ரோடு. பக்கத்தில் மரப்பாலம். அதற்கும் முன் பாகவே பழைமை வாய்ந்த கெப்ளே ஆலை. அதன் எதிரே தெரிந்தது கண் ணம்மை டாக்கீஸ். டாக்கீஸ் என்றால் கீற்றுக் கொட்டகை இல்லை. மேலே சிமெண்ட் ஷீட் போட்டு, பெஞ்சுகளும், சேர்களுமான தியேட்டர். அந்தப் பக்கம் நைனார்மண்டபம், தேங்காய்த் திட்டிலிருந்து இந்தப் பக்கம் முதலியார் பேட்டை, உழந்தை கிரப்பாளையம், காரா மணிக்குப்பம் வரைக் கும் கண்ணம்மை டாக்கீஸ் கொடி கட் டிப் பறந்தது. வீராம் பட்டினம் திருவிழா வுக்கும், வைகுண்ட ஏகாதசிக்கும் முப்பது பைசாவுக்கு மூணு படம் என்று காட்டு வார்கள். ஜனம் விழுந் தடித்துக் கொண்டு ஓடும். இந்தியாவிலேயே முப்பது பைசாவுக்கு மூணு படம் காட்டுகிற தியேட்டர் என்றுகூட பத்திரிகைகளில் செய்தி வந்தது.

கிருஷ்ணவேணி அவசர அவசரமாய் அருந்தவத்தை முந்திக்கொண்டு தியேட்டருக்குள் நுழைந்தாள்.

டிக்கெட் கொடுக்கிற இடத்துக்குப் போனால் கூட்டம் அலைமோதிக் கொண் டிருந்தது. தியேட்டரைப் புதிதாகக் கட்டி அப்போதுதான் 'அன்பே வா' படத்தைப் போட்டிருந்தார்கள். ஒரே சத்தமும்... கூச்சலுமாக இருந்தது. நெருக்கியடித்துக் கொண்டிருந்த பெண்களுக்கு மத்தியில் எப்படியோ அருந்தவம் புகுந்து சற்று நேரத்துக்கெல்லாம் டிக்கெட் எடுத்துக் கொண்டு வந்துவிட்டாள்.

இருட்டத் தொடங்கியிருந்த நேரம். தியேட்டர் ஆபீசிலும் வாசலிலும் 'பனிச் சென்று...' பிரகாசமான விளக்குகள் எரியத் தொடங்கின. மூணு மணி ஆட்டம் முடிந்து முதல் ஆட்டம் தொடங்க இன்னும் அரை மணி நேரம்தான் இருந்

தது. பெண்கள் டிக்கெட் வாங்கும் கௌண்டருக்கும் முன்பாக சிமெண்ட் தரை. அப்போதுதான் வேலையெல்லாம் முடித்து ஆனந்தாயி அலுப்போடு வந்து உட்கார்ந்தாள். ஆனந்தாயியின் புருஷன் மீசை முருகேசனும் கூட வந்து உட்கார்ந்தார். வயசானாலும் இன்னும் அந்தப் பழைய காலத்து நினைப்பு குறையாத தோற்றம்.

''ரொம்ப நாளைக்கப்புறம் எம்.ஜி.ஆர். படமின்னு இன்னைக்குத்தான் நம்ம கொட்டாயில நல்ல கூட்டம்'' என்றார் முருகேசன்.

''அதனால எனக்குத்தான் ரொம்பக் கஷ்டம். இந்த மூணு மணி ஆட்டம் முடிஞ்சு பெருக்கப் போனா, எங்க பார்த்தாலும் பீடியும் சிகரெட்டும் பத்தாததுக்கு வாந்தியுமா ஒரே நாத்தம்.''

''சினிமா பார்க்க வர்ற ஜனங்கன்னா அப்படித்தான் இருப்பாங்க ஆனந்தாயி. அதுக்கெல்லாம் நாம கோவிச்சிக்கக் கூடாது.''

''நான் ஏன்யா கோவிச்சிக்கிறேன்? நம்ம தலையெழுத்து நம்ம பொழப்பு அப்படின்னு உங்கிட்ட சொல்ல வந்தேன்'' என்றபடியே ஆனந்தாயி அவசர அவசரமாக எழுந்து,

''வர்றேன்யா. நீ போய் வேலையைக் கவனி. முதல் ஆட்டம் முடியறதுக்குள்ள நான் வீட்டுக்குப் போயி சாப்பாடு செஞ்சு வச்சிட்டு மறுபடியும் வரணும்'' என்று அலுத்தபடியே கிளம்பினாள்.

**இந்தியாவிலேயே முப்பது பைசாவுக்கு மூணு படம் காட்டுகிற தியேட்டர் என்று பத்திரிகைகளில் செய்தி வந்தது**

இப்போதெல்லாம் கிருஷ்ணவேணி அருந்தவத்தோடு படம் பார்க்க வருவதில்லை. அவள் தனியாகவே வரத் தொடங்கியிருந்தாள். அவள் போக்கில் ஏதோ மாற்றம் இருப்பதும் தெரிந்தது. ஏற்கெனவே அழகாய் இருந்த அவள், தன்னை இன்னும் இன்னும் அழகு படுத்தியபடி கண்ணம்மை டாக்கீஸுக்கு வருவதும் போவதும் நடந்து கொண்டிருந்தது.

அன்று முதல் ஆட்டம் முடிந்து ஆட்கள் வெளியேறிக் கொண்டிருந்தார்கள். வழக்கம் போல ஆனந்தாயி தென்னந் துடைப்பத்தினால் எல்லா இடத்தையும் பெருக்கி சுத்தப்படுத்தி கொண்டே வந்த போது, பெண்களுக்கான கழிவறையில் லைட் வெளிச்சத்தில் ஏதோ நிழலாடுவது போலத் தெரிந்தது. சந்தேகப்பட்ட ஆனந்தாயி அவசர அவசரமாய் அந்த இடம் போனாள். உள் பக்கமாய் தாழிட்டிருந்த அறைக்குள்ளிருந்து பேசுவது கேட்டது. அவ்வளவுதான். ஆனந்தாயி 'தட...தட...' வென்று கதவைத் தட்டவும் தாழ்ப்பாளைத் திறந்து கொண்டு ஆணும், பெண்ணுமாய் இரண்டு பேர் வெளியே வந்து நின்றார்கள். அலங்கோலமான நிலையில் முகம் பேயறைந்தது போல் இருந்தது. ஆனந்தாயி அருவருப்பாக அவர்களை முறைத்துப் பார்த்தாள். அங்கே கிருஷ்ணவேணி. பக்கத்தில் ஒரு பையன். அவனைப் பார்த்ததுதான் தாமதம். ஆனந்தாயிக்கு அப்படி ஒரு கோபம் வந்தது. எதிரே இருந்த கிருஷ்ணவேணியை ஆவேசமாய்த் தள்ளிவிட்டு அந்தப் பையனின் தலையிலும் முதுகிலும் தன் கையில் இருந்த துடைப்பத்தினால் மாறி மாறி அடித்தாள். கிருஷ்ணவேணிக்கு அவமானம் ஒரு பக்கம். என்ன செய்வதென்று புரியாதது ஒரு பக்கம். அதிர்ச்சி அடைந்துபோய் தலை குனிந்தபடி நின்றிருந்தாள். ஆவேசத்துடன் மூச்சிரைக்க

ஆனந்தாயி கத்தினாள்.

''உன்னைப் பார்த்தா அழகா, லட்சணமா, படிச்சவ மாதிரி இருக்கிற. போயும், போயும் இந்தப் பொறுக்கி நாய்கிட்டேயா போய் மாட்டிக்கின. யாரும் பார்க்கறதுக்குள்ள சீக்கிரமா வெளியே போம்மா. இனிமே இந்த மாதிரி நடக்காதே. போ... போ...''

பயத்தில் நடுங்கியபடி இருந்த கிருஷ்ணவேணி மெல்ல பதுங்கிப் பதுங்கிப் போகிற ஒரு பூனையைப் போல தியேட்டரைவிட்டு வெளியே வந்தாள்.

ஒரு வாரம் போயிருக்கும். எப்போதும் போல அருந்தவம் படம் பார்க்கப் போக லாம் என்று நினைத்து கிருஷ்ணவேணியை அவள் வீட்டுக்குப் போய் அழைத்தாள்.

''மனசு சரியில்ல. பெரியம்மா. இன்னைக்கு நீங்க மட்டும் போய்ட்டு வாங்க''

''நல்ல படம்டி. 'வாழ்க்கைப் படகு'. அதுல நல்ல நல்ல பாட்டெல்லாம்கூட இருக்கு. டிக்கெட்டுக்கெல்லாம் நான் பார்த்துக்கிறேன். நீ வீட்ல சொல்லிட்டுக் கிளம்பி வா...''

அருந்தவம் தொடர்ந்து வற்புறுத்தவே கிருஷ்ணவேணியும் புறப்பட்டு இருவருமாக கண்ணம்மை டாக்கீஸுக்கு வந்து சேர்ந்தார்கள். கூட்டம் அவ்வளவாக இல்லை. பெண்கள் டிக்கெட்டுக்கான இடத்தில் வழக்கம்போல அருந்தவமும் கிருஷ்ணவேணியும் உட்கார்ந்திருக்க, அப்போதுதான் அங்கு வந்த ஆனந்தாயி கிருஷ்ணவேணியை நோக்கி வேக வேகமாக வந்தாள். கிருஷ்ணவேணிக்குச் சொல்ல முடியாத பயம். என்ன ஆகப் போகிறதோ என்று அவள் நினைத்தபோதே ஆனந்தாயி அருந்தவத்தைப் பார்த்து...

''ஏம்மா. நீதான் இந்தப் பொண்ணோட அம்மாவா?'' என்றாள்.

அருந்தவத்துக்கு ஒன்றும் புரியவில்லை.

''என்னம்மா... என்ன விஷயம்? தோ... உங்கூட இருக்குதே இந்தப் பொண்ணு. சினிமா படம் பார்க்க வந்து சீரழிய இருந்தது. நல்ல வேளை நான் அன்னைக்கு இருந்து காப்பாத்தி அனுப்பி வச்சேன்.''

அருந்தவத்துக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவள் கிருஷ்ணவேணியின் பக்கமாகத் திரும்பிக் கத்தினாள்.

''ஏண்டி... இந்த அம்மா சொல்றதெல்லாம் உண்மையா?''

கிருஷ்ணவேணி ஒன்றும் பேசாமல் மௌனமாக இருக்க, நடந்த எல்லாவற்றை



## பழைய வாசனை

'பிதாமகன்' படத்தின் விக்ரம் கேரக்டர், கமலின் சப்பாணி கேரக்டர் ரெண்டையும் மிக்ஸ் பண்ணின மாதிரி இந்த சுடலீசன். சுடலீசன்தான் சுருங்கி ஸ்டைலா ஈசான்னு ஆச்சு. விக்னேஷ் நடிக்கும் 'ஈசா' படம் முழுக்க முழுக்க தூத்துக்குடி உப்பளத்தில்தான் படமாகி இருக்கிறதாம். பாடல் வெளியீட்டு விழாவுக்கு வந்த ஆஸ்கர் ரஹ்மான், ''நான் இசையமைப்பாளராக வர்றதுக்கு முன்பு இசைக்குழு நடத்திக்கிட்டு இருந்தேன். என்னோட காலகட்டத்தில் இசைக்குழு நடத்திய நவ்ராக் ஸ்ரீதரோட மகன் இந்தப் படத்தின் இசையமைப்பாளர். அந்தப் பழைய வாசனைக்காகத்தான் நான் இன்னைக்கு இங்க வந்திருக்கேன்'' என்று அசத்தினார். (உப்பளத்துப் படமில்ல... உப்பு பலமாகத்தான் வேலை செய்யுது!)

- ஆகாஷ்

யும் ஒன்றுவிடாமல் சொன்னாள் ஆனந்தாயி.

''என் வீட்டுக்காரருக்கு கொஞ்ச நாளா உடம்பு சரியில்லாம போச்சம்மா. நல்ல மனுஷனா இருக்கிற எங்க முதலாளி என் வீட்டுக்காரரர் செஞ்ச வேலையை என் மகனுக்குப் போட்டுக் கொடுத்தாரு. அந்தப் படுபாவி, பொம்பளைங்க டிக்கெட் கிழிக்கறேன்னு சொல்லிட்டு பொம்பளப் பொறுக்கியா மாறிட்டான். இந்தப் பொண்ணுகிட்ட அவன் நடந்துக்கிட்டதைப் பார்த்து நான் பெத்த புள்ளைன்னு கூட பார்க்காம தொடப்பக் கட்டையாலயே சாத்து சாத்துன்னு சாத்திட்டேன்.''

''இங்க பாரும்மா. நான் இந்த சினிமா கொட்டாயில பெருக்கிற வேலை செய்யறவனு உனக்குத் தெரியும். அப்படி பெருக்கிறத எல்லாம் வாரிப் போயி வெளியே கொட்டறதுபோல, நீயும் அன்னிக்கு நடந்த கேவலத்தை உன் மனசில இருந்து அப்படியே வெளியே தூக்கிப் போட்டுடும்மா. அப்பதான் நீ எப்பவும்போல நல்லபடியா நிம்மதியா வாழ முடியும்.''

ஆனந்தாயி தன் மகனுக்காக மன்னிப்பு கேட்பது போலவும், புத்திசொல்வது போலவும் கிருஷ்ணவேணியிடம் சொல்லிவிட்டு 'விடு... விடென்று...' தன் வேலையைப் பார்க்கக் கிளம்பியதும் அருந்தவமும் அவள் பங்குக்கு, கிருஷ்ணவேணியைப் பிடித்துக்கொண்டாள்.

அருந்தவம் கேட்கக் கேட்க கிருஷ்ணவேணி கலங்கினாள்.

''பெரியம்மா தெரியாம செஞ்சுட்டேன்.''

கிருஷ்ணவேணி தன் தவறை உணர்ந்து கொண்டவளைப்போல குரல் உடைந்து போய் பரிதாபமாகச் சொன்னதும், அருந்தவத்துக்கு மனம் கசிந்து போனது. அவள் அப்படியே கிருஷ்ணவேணியைச் சேர்த்து அணைத்துக் கொண்டு மிகவும் ரகசியமான குரலில் கேட்டாள்.

''கிருஷ்ணவேணி எதுவும் தப்பு கிப்பு பண்ணிடலையே...''




''எதுக்கு டாக்டர் மூணு விதமா சீட்டு குலுக்கிப் போட்டுப் பார்க்கறீங்க?''

''உங்களுக்கு வந்திருக்கிற காய்ச்சல் மலேரியாவா, டைஃபாய்டா, பறவைக் காய்ச்சலான்னு தெரிஞ்சுக்கிடத்தான்.''

- பெ.கலாசாமி

''சத்தியமா இல்லம்மா...''

''என் கண்ணு. நீ மகராசியா இருப்ப. வா வீட்டுக்குப் போகலாம். இனிமே இந்த சினிமாவும் வேணாம். ஒரு மண்ணும் வேணாம்.''

சொல்லிவிட்டு அருந்தவம் கிருஷ்ணவேணிக்காகக் காத்திராமல் அவள் கையைப் பிடித்துத் 'தர... தர...' வென்று இழுத்துக்கொண்டு வெளியே வர, கிருஷ்ணவேணி மெல்ல திரும்பிப் பார்த்தாள். அங்கே கண்ணம்மை டாக்கீஸில் வாழ்க்கைப் படகு படத்தின் முதல் ஆட்டம் சினிமாவுக்கு கூட்டம் நிறையத் துவங்கியிருந்தது. ●




தமிழ்நாட்டில் நான்கு சட்டமன்றத் தொகுதிகளில் இடைத்தேர்தல் நடத்த வேண்டும். தொண்டாமுத்தூர், பர்கூர், இளையாங்குடி மற்றும் கம்பம் ஆகிய தொகுதிகள்தான் அவை. தொண்டாமுத்தூர், பர்கூர், கம்பம் ஆகிய தொகுதிகளுக்குத் தேர்தல் நடத்துவதில் எந்தப் பிரச்னையுமில்லை. ஆனால் இளையாங்குடியில் ஒரு சிக்கல் இருக்கிறது. தொகுதி மறுசீரமைப்பில் இளையாங்குடி தொகுதியே முற்றிலுமாகப் பிரிக்கப்பட்டு, பக்கத்து தொகுதிகளோடு சேர்க்கப்பட்டு விட்டது. மறுசீரமைத்த தொகுதிகளின் அடிப்படையில் பாராளுமன்றத் தேர்தலும் நடந்து விட்டது. இந்த நிலையில், இல்லாத இளையாங்குடிக்கு இடைத்தேர்தல் எப்படி சாத்தியம் என்ற கேள்வி எழுப்பப்படுகிறது. ''2006ல் சட்டமன்றத் தேர்தலின்போது இருந்த இளையாங்குடிக்குத் தேர்தல் நடத்துவதில் எந்தச் சட்டச் சிக்கலும் இல்லை; சட்டசபையின் ஆயுள் 2011 வரை இருப்பதால், தொகுதி காலியானால், இடைத்தேர்தல் நடத்தலாம்'' என்றும் சில சட்ட நிபுணர்கள் சொல்கிறார்கள். இது தொடர்பாக வாக்காளர்கள் நீதிமன்றம் போகக்கூடும்.

சேலம், ஈரோடு தொகுதிகளில் காங்கிரஸ் தலைவர்கள் தங்கபாலுவும், இளங்கோவனும் தோற்றதற்கு முக்கியக் காரணம், தி.மு.க.வினர் காலை வாரிவிட்டதே என்று காங்கிரஸார் கடுப்பில் இருக்கிறார்கள். மற்ற தொகுதிகளைப் பற்றி முதல்வர் அன்றாடம் விசாரித்த நிலையில் இந்த இரண்டு தொகுதிகளைப் பற்றி அவர் கவலைப்படவில்லை என்கிறார்கள். ''இவர்கள் இருவரும் ஜெயித்து வந்தால் தில்லியில் அமைச்சராக்கப்பட்டு முக்கியத்துவம் பெறுவார்கள். அப்புறம் நமக்குச் சங்கடம் கொடுப்பார்கள்'' என்று தி.மு.க. கருதியதாம். இதற்கிடையில் கலைஞர் இலாக்கா ஒதுக்குவதில் சிணுங்கிக் கொண்டிருந்தபோது, உள்துறை அமைச்சர் ப.சிதம்பரம், தி.மு.க.வுக்கு ஆதரவாக காங்கிரஸ் தலைமையிடம் உரத்த குரல்கொடுத்தாராம்.


* இளங்கோவன்


* தங்கபாலு

# அவங்க ஜெயிச்சா நமக்குச் சங்கடம்!

கடந்த சட்டமன்றத் தேர்தலில் கொங்கு மண்டலத்தில் ஒன்பது சட்டமன்றத் தொகுதிகளை அ.தி.மு.க. கைப்பற்றியதால் கடுப்பான கலைஞர், பொங்கலூர் பழனிச்சாமிக்கு ஒரு வருடம் கழித்துதான் அமைச்சரவையில் இடம் கொடுத்தார். இப்போது திருப்பூர், கோவை, பொள்ளாச்சி ஆகிய மூன்று இடங்களிலும் தி.மு.க. கூட்டணி அவுட். ''இனி பொங்கலூரார் காரிலிருந்து தேசியக் கொடியை அகற்ற வேண்டியதுதான்'' என்கிறார்கள் உடன்பிறப்புகள்.

– ஸ்ரீநி

# தீராத விளையாட்டு விட்டலன்



தாம்ஸேட்டியின் தினசரிக் கடமை ஒன்று இருந்தது. தன் வீட்டில் சமைத்த உணவை பாண்டுரங்கனுக்கு நைவேத்தியம் செய்தபிறகு புசிப்பதே அவரது வழக்கம். 'நைவேத்தியம் என்றால் என்னப்பா?' என்று குழந்தை நாமதேவன் ஒருமுறை கேட்க, 'பாண்டுரங்கனுக்கும் பசிக்கும் இல்லையா? இந்த நைவேத்தியம் அவனுக்கான உணவு' என்று பதிலளித்தார். குழந்தை நாமதேவனும் இந்தப் பதிலில் திருப்தியடைந்தான்.

சில மாதங்கள் கழித்து தாம்ஸேட்டி வெளியூர் செல்ல நேர்ந்தது. அப்போது தன் மனைவியிடம் 'பாண்டுரங்க நைவேத்தியத்தை நாமதேவனிடம் கொடுத்தனுப்பு' என்றார். அதன்படியே ஒரு பாத்திரத்தில் உணவைக் கொடுத்தனுப்பினாள் குணாபாய்.

சந்தோஷத்துடன் விட்டலனின் ஆலயத்துக்குள் நுழைந்தான் நாமதேவன். உணவை விட்டலனின் விக்கிரகத்துக்கருகே வைத்தான். சிறிது நேரம் காத்திருந்தான். விட்டலன் வரக் காணோம். ''இன்னும் எவ்வளவு நேரம்தான் நான் காத்திருப்பது? அப்பா சீக்கிரமே நைவேத்தியம் அளித்துவிட்டுத் திரும்பி விடுவாரே. என்னிடம் மட்டும் ஏன் இந்தத் தாமதம்?'' என்று உரிமையுடன் கோபித்துக்கொண்டான். அப்போதும் விட்டலன் வாராதிருக்க, துக்கம் தாங்க முடியாத நாமதேவன், ''நீ இப்போ வரலேன்னா இந்தக் கல்லிலே என் தலையை மோதிப்பேன்'' என்றான். வந்துவிட்டான் விட்டலன். நாமதேவன் அளித்த 'விருந்தை' விருப்பத்துடன் உண்டான்.

காலிப் பாத்திரத்துடன் வீடு திரும்பிய மகனிடம், ''என்னடா, பசித்ததால் வழியிலே சாப்பிட்டுவிட்டாயா?'' என்று அம்மா கேட்க, நடந்ததைக் கூறினான் நாமதேவன். சராசரியான யாருக்குத்தான் இதை நம்பத் தோன்றும்? வீடு திரும்பிய கணவனிடம் இதைப் பகிர்ந்துகொண்டாள் குணாபாய்.

'மகன் பொய் சொல்கிறான். இந்தப் பழக்கத்தை முளையிலேயே கிள்ளி விடவேண்டும். அவனைக் கையும் களவுமாகப் பிடித்துத் திருத்தவேண்டும்' என்று முடிவெடுத்தார் தந்தை. அடுத்த நாள் நைவேத்தியத்தை மகனிடம் கொடுத்தனுப்பிவிட்டு, அவ



ணறியாமல் பின்தொடர்ந்தார்.

அங்கே அவர் கண்ட காட்சியும், 'காணாத காட்சியும்' அவரை மெய்சிலிர்க்க வைத்தன.

'வந்துவிட்டாயா விட்டலா, சீக்கிரமாக இதைச் சாப்பிடு' என்கிறான் மகன். எதிரில் விட்டலனின் சிலையைத் தவிர யாரும் இல்லை. ஆனால் கண்ணெதிரே உணவு சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டிருக்கிறது.

உண்மையை உணர்ந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார்.

**நா**ட்கள் நகர்ந்தன. விட்டலனின் ஆலயமே கதி என்று இருக்கத் தொடங்கினார் நாமதேவர். தொடக்கத்தில் நம் குழந்தைக்குத்தான் எத்தனை பக்தி என்று ஆனந்தப்பட்ட தாய், இளைஞனாக வளர்ந்த பின்னும் அவன் விட்டல பக்தியில் மூழ்கியிருப்பதைக் கண்டதும் விசனப்பட்டவள், 'என் மகனை எனக்குத் திருப்பிக்கொடு' என்று விட்டலனிடம் வேண்டத் தொடங்கினாள். மனம் இளகிய பாண்டுரங்கனும் நாமதேவரை வீட்டுக்குச் செல்லப் பணித்தான்.

வீடு திரும்பிய அடுத்த நாளே ஒரு மூட்டைத் துணியை மகனிடம் கொடுத்து விற்றுவரச் சொன்னார் தந்தை. தெருவில் நடக்கும்போது, தான் துணிவிற்க வந்ததைக் கூவிக்குரல் கொடுக்க

# துணிகளைப் பெற்ற தோண்டோபா!




வேண்டுமல்லவா? அல்லது ஒவ்வொரு வீட்டுக் கதவையும் தட்டி விவரத்தைக் கூற வேண்டும் அல்லவா? இரண்டையும் செய்யவில்லை நாமதேவர். தலையில் துணிக்கட்டை வைத்துக் கொண்டு, விட்டலனின் மீது பாடல்களைப் பாடியபடி நடந்தார்.

மாலை ஆனது. வீடு திரும்ப வேண்டிய நேரம். அப்போது, "நீ கொண்டுவந்த துணிகளை நான் வாங்கிக்கொள்கிறேன்" என்றது ஒரு குரல். குரல் வந்த திசையை நோக்கித் திரும்பினார் நாமதேவர். அங்கே ஒரு கல் இருந்தது. விட்டலனை மட்டுமே மனத்தில் நிரப்பிக்கொண்டிருந்த நாமதேவருக்கு, கல் பேசுமா என்றெல்லாம் யோசிக்கத் தோன்றவில்லை.

எடுத்துச் சென்ற துணிகளை அந்தக் கல்லின் அருகில் வைத்தார் நாமதேவர். "பணத்தை இப்போதே தருகிறீர்களா?" என்றார். பதிலைக்

## அபங்க அமுதம் 8

'நவ்ஹே மாஜே காஹீ நேணோ துஜவிண
ஹேராஸீ நாராயணா ஸாஹாகாரீ
காம்பஸுத்ரீ தாவீ அனேக புதளே
நகளேசி கேளே கேளகரீ
தைத்யவ்ருத்ராஸுர ஆபடீ ஆகாசீ
ஆனந்தே கேளவிஸீ ஸுரவரா
நாமா ம்ஹணே துஜீ நகளே கரணீ
ஜன்மோஜன்மீ ஜணீ தாவீ பாய'

-பக்த நாமதேவர்

'எனக்கு உன்னைத்தவிர வேறு யாரையும் தெரியாது. பொம்மலாட்டத்தில் தங்களை ஆட்டுவிப்பவன் யார் என்பதே தெரியாமல் பொம்மைகள் ஆடுகின்றன. விருத்திராஸுரனை வதம் செய்து தேவர்களை ஆனந்தப்பட வைத்தாய். இதைச் செய்தது நீதான் என்பதைக்கூட அவர்கள் அறிய மாட்டார்கள். நான் எத்தனை பிறவிகள் எடுத்தாலும் உன் திருப்பாதங்களை எனக்குக் காண்பித்து அருள்வாயாக'.

காணோம். ''சரி, எட்டு நாட்களுக்குள் பணத்தைக் கொடுத்துவிட வேண்டும்'' என்று கூறிவிட்டு வீட்டுக்கு நடையைக் கட்டினார். ''யாருக்கு விற்றாய்?'' என்று கேட்ட அப்பாவுக்கு, 'தோண் டோபாவிடம் விற்றேன்' என்று


✱ பண்டரிபுரம்

பதில் அளித்தார். அந்தப் பெயரி லும் சிலர் இருந்தார்கள் என்றாலும் தோண்டோபா என்றால் மராத்திய மொழியில் கல் என்று பொருள்!

எட்டு நாட்கள் கடந்தும் பணம் வந்து சேரவில்லை. வேகமாகக் கிளம்பிய நாம தேவர் பணம் கொடுக்காத 'வாடிக்கை யாளரை' இழுத்துவந்து ஓர் அறையில் வைத்துப் பூட்டினார். விவரத்தைத் தந்தை யிடம் கூற, அவர் பதறினார். 'உயிருடன் யாரையோ அறையில் பூட்டியிருக்கிறான். அவன் உயிரோடு இருக்க வேண்டுமே'

**"நீ கொண்டு வந்த துணிகளை நான் வாங்கிக் கொள்கிறேன்" என்றது - ஒரு குரல். குரல் வந்த திசையில் ஒரு கல் இருந்தது.**

என்ற பதைப்புடன் கதவைத் திறந்தார். அங்கே இருந்த கல்லைக் கண்டு தந்தை யின் விழிகள் விரிய, மகனுக்கு வேறொரு அதிர்ச்சி.

'கருங்கல்லை நாம் அறையில் அடைத்திருக்க, அது எப்படி தங்கமாக மாறியது?'.

வீடு ஏழ்மையில் இருந்த தால் தையற்காரரான தாம்ஸேட்டி அந்தத் தங்கத்தை வைத்துக் கொள்ள விரும்பினார். ஆனால் அதில் ஒரு சிறு பகுதியை மட்டும் (துணி களுக்கான கிரயம்) அப்பாவிடம் அளித்துவிட்டு, மீதி தங்கத்தை அது முதலில் இருந்த நிலப்பகுதியிலே வைத்து விட்டுத் திரும்பினார் நாமதேவர்! நிலத்தில் வைத்த அடுத்த கணமே தங்கம் மீண்டும் கருங்கல்லானது.

தங்கமோ வைரமோ நாமதேவருக்கு ஒரு பொருட்டேயில்லை என்பதை விளக்கும் வேறொரு பிரமிக்க வைக்கும் நிகழ்ச்சியும் நடந்தேறியது.



# புறக்கணிக்கிறார்கள் புத்தன் சொல்லை!

**டும்... டும்... டும்... கே.ஆர். ஸ்ரீநிவாச ராகவன், வரம், 33/15, எல்டாம்ஸ் சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை-18. விலை ரூ. 50.00**

திருமணத் தடைகளைத் தீர்க்கும் என்று வழிபடப்படும் திருத்தலங்கள் குறித்த ஒரு தொகுப்பு. திருமணச் சடங்குகள், அவை குறித்த விளக்கங்கள், ஆண்டாள் பாடிய நாச்சியார் திருமொழி, திருமணச் சட்டத்தின் முக்கிய அம்சம் குறித்த சுவையான தகவல்களும் நூலின் பிற்பகுதியில் இடம் பெற்றுள்ளன. திருமணத்தை எதிர்நோக்கியிருப்போருக்கும், திருத்தலப் பயணங்கள் செய்ய விரும்புவோருக்கும் உதவும் நூல்.










**வாரந்தோறும் வாலி, கவிஞர் வாலி, குமரன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை-17. விலை ரூ. 230/-**

2005-2006ம் ஆண்டுகளில், அப்போதைய நாட்டு நடப்பு, சமூக நிகழ்வுகள் குறித்து குமுதம் இதழில் கவிஞர் வாலி எழுதிய எழுபது கவிதைகளின் தொகுப்பு. கவிதைகளுக்குக் கருவாக எடுத்துக் கொண்டுள்ள நிகழ்வுகளில் சில சுவாரஸ்யமானவை. சில இன்றைய நிலையிலும் பொருத்தப்பாடு உடையவை. 'போற்றுகிறார்கள் புத்தன் பல்லை; புறக்கணிக்கிறார்கள் புத்தன் சொல்லை' - இது ஒரு சான்று.

**ஐயம் போக்கும் ஆன்மிகம் - பாகம் 3, ப்ரம்மஸ்ரீ சேஷாத்திரிநாத சாஸ்திரிகள், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை-02 விலை ரூ. 55.00**

வேதம், புராணம், தர்மசாஸ்திரம், மன நலம், உடல்நலம், அன்றாட நடைமுறை, கலாசாரம் தொடர்பான வாசகர்களின் பல்வேறு கேள்விகளுக்கு சேஷாத்ரிநாத சாஸ்திரிகள் அளித்துள்ள விளக்கங்களின் தொகுப்பு. பதில்களைத் தேடும் மனநிலையில் இருப்போர்க்குப் பயன் தரும் நூல்.

**- நேயமுகில்**

-மமதி டிப்ஸ்

''எல்லாப் பெண்களுக்கும் ஆக்கபூர்வமான திறமைகள் இருக்கு. பனியால் மூடிய பச்சை வெளி போல, இலை மறைந்துள்ள கனி போல அது மறைஞ்சிருக்கு. அவ்வளவுதான். அதை வெளிக்கொண்டு வர ஊடக முயற்சியும், கொஞ்சம் உள்ளார்ந்த உணர்வும்தான் தேவை'' என்று பிராக்டிகல் பிரசங்கத்தோடு பேச்சைத் துவங்கினார் சன் டி.வி.யின் ராணி மகாராணி நிகழ்ச்சித் தொகுப்பாளினி மமதி அஞ்ஜன்.

அவரிடம் பேசத் துவங்கினால் நான்ஸ்டாப்பா அதே நேரம் நல்ல தமிழில் அழகிய குரலால் வலம்வருகிறார்.

''வாழ்க்கை என்பது வெற்றி- தோல்வியை மட்டும் சார்ந்தது அல்ல. இந்த இரண்டையும் தாண்டி பங்கேற்றல், பங்கிட்டுக் கொள்ளுதல் என்பதுதாங்க மிக முக்கியம். இந்த கேம்-ஷோவில் வெற்றி பெறுபவர்களை மட்டுமே மையப்படுத்தாமல், பங்கேற்பாளர்கள் ஒவ்வொருவருக்கும் முக்கியத்துவம் தருகிறோம். தன்னுடைய பங்களிப்பு முக்கியம் என ஒவ்வொரு பெண்ணும் எண்ணுவதால்தான் குறுகிய காலத்துக்குள் பெரிய வெற்றியைப் பெற்றிருக்கிறது. இந்த எண்ணம் குடும்பத்திலும் பரவி என் பங்களிப்பும், என் பங்கேற்பும்னு இருந்தால் இல்லமும் இந்த நிகழ்ச்சியைப் போலவே பிரமாதமாக ஜொலிக்கும் என்பதுதான் என்னோட லைஃப் லாஜிக்.

வாழ்க்கைன்னா என்ன ஸார்? அனுபவங்களின் தொகுப்புதானே. வாழ்க்கையில் நடக்கும் ஒவ்வொரு விஷயத்தையும் 'ஹை... இந்த அனுபவம் புதுசா இருக்கே... இது என்னை எப்படி சிரிக்க அல்லது அழவைச்சது'ன்னு நமக்குள்ளேயே கேட்டுப் பார்க்கப் பழகிக் கொண்டால் எந்தப் பிரச்னையும் நம்மைப் பாதிக்காது. அதே சமயத்தில் மற்றவர்களுடைய வேதனையையோ, கஷ்டத்தையோ, குத்திக் காட்டி நகைச்சுவை செய்வதில் எனக்கு உடன்பாடில்லை. என்னுடைய பேச்சு, மற்றவர்களின் உணர்வுகளைக் காயப்படுத்திவிடக் கூடாது என்பதில் கவனமாக இருக்கிறேன். நிகழ்ச்சியில் மட்டுமல்ல நிஜத்திலும்.

என்னிடம் பேசும் ஒரு சிலர், 'மேடம் நீங்க காம்பயரிங் செய்யும்போது நல்ல தெளிவா தமிழ் பேசறீங்க. ரொம்ப ஆச்சரியமா இருக்கு' என்கிறார்கள். இந்த ஆச்சரியங்கள் தமிழ்நாட்டில் நீடிக்கக் கூடாது. இதைச் சொல்லும்போது ரொம்ப வருத்தமாயிருக்கு. தமிழ்நாட்டில் பிறந்து வளர்ந்து சரியா தமிழ் பேசத் தெரியலைன்னாதானே ஆச்சரியம்.

இன்றைய கேம்ஷோக்களைப் பற்றி எதிர்மறையான விமர்சனங்களைப் பத்திரிகைகள் வெளியிடுகின்றன. இது அந்தந்தப் பத்திரிகையின் கருத்தாகத்தான் இருக்க முடியுமே தவிர மக்களின் கருத்தாக இருக்க முடியாது என்பது என்னோட அபிப்ராயம்.

**"இந்த ஆச்சரியம் தமிழ்நாட்டில் நீடிக்கக் கூடாது"**

'மமதி' என்ற பெயருக்கு அன்பானவள், மென்மையானவள் என்று அர்த்தம். நான் மட்டுமல்ல. நம்மைச் சுற்றியுள்ள உறவுகளுக்குள்ளும் அன்பும் மென்மையும் இருந்தால் எப்போதும் எல்லோரும் சந்தோஷமாக இருக்கலாம்.

என்னிடம் யாராவது அழகு டிப்ஸ் கேட்டால்... 'எப்போதும் எல்லா கவலையையும் கடவுள் கிட்ட விட்டுட்டு மனத்தில் சிரிப்பு தீபத்தை ஏற்றி வையுங்கள். வாழ்வின் ஒவ்வொரு நொடிப் பொழுதையும் எப்படி முழுமையாக அனுபவிக்கலாம்னு திட்டமிட்டு அனுபவியுங்கள்' என்பேன்.

இதை நடைமுறைப் படுத்தினாலே போதும். அழகு அப்படியே தங்கிடும்.''

மமதி மழை, சில்லென்ற சாரலோடு இடைவெளி விட்டது.

- ராகவ்குமார்

# ஒவ்வொரு நொடியும் அனுபவி!




# அன்றைய களம்

சமகால அரசியலை நாடகத்தின் வாயிலாகப் பரப்பிய பாரம்பரியம் தமிழ்நாடக மரபுக்கு உண்டு. வள்ளல் பாரியின் பறம்பு மலை குறித்தான விஷயத்தோடு, பாரிக்கும் மூவேந்தருக்குமான சண்டையினூடே இக் கால அரசியல் சூழலை நாசூக்காகச் சொல்லி நகர்த்திச் செல்லும் நாடகம் 'பாரி படுகளம்' சமீபத்தில் நடந்தேறியது.

பிரளயன் எழுதி இயக்கிய இந் நாடகத்தை, புதுவை பல்கலைக்கழகத்தின் நிகழ் கலைத்துறையும் சென்னை கலைக்குழுவும் சேர்ந்து தொடர்ந்து பல இடங்களில் அரங்கேற்றி வருகின்றன.

பாரியின் வேலிகளற்ற நிலமும், மக்களின் எல்லைக்கோட்டுக்கு அடங்காத சுதந்திரமும் மக்கள் ஆடிப் பாடி களிப்புற வாழும் வாழ்க்கையும் காட்சிப் படுத்தப்பட்டுள்ளன. மூவேந்தர்களைச் சென்றடையும் பாணர்களும் பாடினியரும் அங்கும் பாரியின் பெருமையை சிலாகித்துப் பாடுவதே, பாரிக்கு எதிராக மூவேந்தர்கள் ஒன்றுபடக் காரணமாகிறது. அடுத்ததாக மூவேந்தரின் குடி பெருங்குடி; பாரியுடையதோ சிறு குடி எனும் பாகுபாடும் பாரிக்கு எதிராக அமைகிறது. ''அனைவரும் தமிழ் பேசுபவர்கள் என்கிற அடிப்படையில் இப்போரைத் தவிர்த்து ஒன்றுபடலாம்'' எனும் கபிலரின் கூற்றை, மூவேந்தரும் மறுத்து பெருங்குடி, சிறுகுடி என பேதம் பார்க்கின்றனர். கபிலர் 'கெட்டது குடி தமிழ்க் குடி' என மொழியால் ஒன்றுபடாதவனின் குடி கெடும் என அறிவுறுத்துகிறார். ஆயினும் போர் துவங்கிவிடுகிறது.

எல்லை விரிவு, புகழ் பாடுதல், பிற நாட்டுப் பெண்டிரையும், பொருளையும் உடைமையாக்குதல் என்பதைத் தவிர்த்து, மனித நேயம் கொஞ்சமும் இல்லாதவர்களாகக் காட்டப்படுவது; நியாயங்களற்றும் போர் நடக்கும் என்பது; மருத்துவமனை, கல்விக்கூடம், குழந்தைகள் மீது அழித்தொழிப்பு நடப்பதைக் கேள்வி கேட்பது போன்ற காட்சிகளின் மூலம் சமகால அரசியல் நிலையையும், அறம் வற்றிய போர்ச்சூழலையும் அன்றைய களத்தில் பொருத்திக் காட்டுகின்றனர்.

பெண்களை முன்னிலைப்படுத்துகிற வகையில் காட்சிகள் அமைக்கப் பட்டுள்ளது நாடகத்தின் தனிச்சிறப்பாகும். அங்கவை, சங்கவையோடு அறிமுகமாகும் பாரி, தம் பெண்கள் அரசியல் நுட்பங்களைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்று சொல்லும் காட்சியின்

யமைப்பு இல்லை.

வேளிர்குலப் பெண்ணின் போர்த்திறனைக் கண்ட படை வீரன் 'பெண் புலியோ' என ஐயுறுவதும், எமது படையிலும் பெண்களைச் சேர்க்கச் சொல்ல வேண்டும் என்பதுமான பகுதியும் பார்வை யாளர் மத்தியில் பெரும் வர வேற்பைப் பெற்றன.

**நா**டகத்தில் பாரியின் மகள் அங்கவையாக தமிழ் பேசிய



# இன்றைய நிறம்



● பிரளயன்

மூலம் சமூகத்தில் பெண்ணை ஒதுக்கும் செயலைக் கிள்ளியெறிந்து பெண்களை அரசியற்படுத்துகிறார்.

பூர்வகுடிகள் வழிபடு துறையில் பால்பேதம் பார்ப்பவர்கள் அல்லர் என் பதை உணர்த்தும் முகமாய், நடுகல் வழிபாட்டுக் காட்சியின்போது, பாரி தன் மகள்களையே வழிபாட்டினை நிகழ்த்தச் சொல்கிறார். ஆலய வழிபாட் டுக்காக எழுப்பப்படும் உரிமைக்குரல் அரசியல் செயற்பாட்டுக்குள்ளே சல சலப்பை ஏற்படுத்தும் இச்சூழலில் வழிபாட்டில் மகளிரை முன்னிறுத்தும் பதிவு சிறப்பு.

வேளிர்குலப் பெண் காதலா நாடா என்ற நிலையில் நாடுதான் என ஒரே நொடியில் முடிவெடுக்கிறாள். காதலுக் காக கண்ணீர் விட்டுக் கதறும் காட்சி

குயில் நிலாங்கா வியநகே என்ற சிங்களப் பெண் என பிரளயன் அறிமுகப்படுத்திய போது, கைத்தட்டல் அடங்க வெகுநேர மானது.

நாடகத்தில் நடித்தவர்கள் இணைந்து மேடை வடிவமைப்பு, ஆக்கம், மேடைப் பொருட்கள், உடை, இசை ஒருங்கிணைப்பு, வாய்ப்பாட்டு முதலானவற்றைச் செய்துள் ளனர். இசையும் வாய்ப்பாட்டும் நாடகத்துக்கு வலு சேர்க்கின்றன. சங்க காலத்து நிகழ்வு இக்காலத்துக்கும் பொருந்துகிறது என்பதனை தற்போதைய அரசியல் கொண்டு நேர்த்தியாக மீள்வாசிப்பு செய்திருக்கிறார். பாரி படுகளம் பெண்களை அரசியற்படுத்த விரித்திருக்கும் சிவப்புக்கம்பளம்.

— பவழா —

கல்கி 17.5.2009 இதழில் வெளியான கிருஷ்ணாவின் 'காதல் வலை' சிறுகதையையும், அது குறித்த தில்லையாடி ராஜாவின் விமர்சனத்தையும் ஒரு விவாதத்துக்கு உட்படுத்தினோம். அடக்குவதும், அடங்கிப்போவதும் காதலா? வாசகர்கள் தெரிவித்த கருத்துகள் இங்கே.

கதையை வாசிக்கத் தவறியவர்களுக்காக, ஒரு சுருங்கிய கதைச் சுருக்கம்: கல்லூரி ஆண்டு விழாவில் திறமைகளை வெளிப்படுத்தி நாயகியாக மின்னிய தாமரை, அடுத்த ஆண்டு விழாவில்

# அடங்குவது
# அடக்குவது

- தில்லையாடி ராஜாவின் கடிதம்

**வாசகர்களின் கருத்துக் குரல்கள்:**

**ஸ்ரீதேவி, கும்பகோணம் (24):**

திறமைகளுக்காக அந்தப் பெண்ணை நேசித்த காதலன் அவளை மோட்டிவேட் செய்வதுதான் அழகு. ஆனால், அவள் மேலே இருந்த அவனோட காதல் possession ஆகிடுச்சு. அப்புறம் அங்கே உண்மையான அன்பு இருக்காதே. இரண்டு தனி நபர்கள் இயன்ற வரை தங்கள் தனித்தன்மையை இழக்காது கூடி வாழ்வதுதான் மணவாழ்க்கையின் அடிப்படை. அந்த அடிப்படை இங்கே அடிபட்டுப் போய்விடுகிறது.

**ஜெயப்பிரபா, பொள்ளாச்சி (21):**

ஆணோ, பெண்ணோ, அடுத்தவரின் தனிப்பட்ட சுதந்திரத்தில் தலையிடக் கூடாது. தனித் தன்மைகளை ஊக்குவிக்காவிட்டாலும் தடை செய்யாமல் இருக்க வேண்டும். ஆனால், இந்தக் கதையில் செந்தில் தரப்பு நியாயங்களையும் கூறியிருக்கலாம்.

**அருண் கார்த்திக், சென்னை(24):**

லட்சியங்களை அடைவதற்காக சாவுக்கும் தயாராக இருன்னு விவேகானந்தர் சொல்லியிருக்கார். ஆனால், திருமண வாழ்க்கையில், குறிப்பாக பெண்கள், தனித்தன்மைகளை, லட்சியங்களை விட்டுக் கொடுக்கத்தான் வேண்டியிருக்கு. நம்ம சமூக அமைப்பு அப்படி. நடிகைகளே இதற்கு நல்ல உதாரணம்.

**மகாலக்ஷ்மி, சென்னை (24):**

இவ்வளவு இளம் வயதில் ஏற்படுவது நிலையான காதலாக இருக்க வாய்ப்புகள் குறைவு. அதற்கு இவ்வளவு முக்கியத்


* மகாலக்ஷ்மி


* அருண் கார்த்திக்


* ஜெயப்பிரபா

தன் காதலனின் விருப்பமின்மையால் போட்டிகளில் பங்கேற்காமல் இருக்கிறாள். அதை அறியும் பேராசிரியை, 'திறமைகளைக் கண்டு உன்னை ரசித்து விரும்பியவன், இப்போது உன் மேல் ஆதிக்கம் செலுத்தத் துவங்குகிறான். இதன் மூலம் நீ இழக்கப் போவது உன் தனித் தன்மையை' என்று உணர்த்துகிறார். அந்த ஆண்டு விழாவில் தாமரை கலந்து கொள்கிறாள்.



# காதலா அன்பா?

துவம் தரத் தேவையில்லை.

**கீதப்ரியா, பி.காம்., இரண்டாம் ஆண்டு, காயிதே மில்லத் கல்லூரி:**

அன்பின் பெயரால் அடிமைப்படுத்துவது, அடிமைப்படுவதுதான் அன்பு என போதிப்பது அயோக்கியத்தனம். இது அப்பா, அம்மா, காதலன் - சகலருக்கும் பொருந்தும். அடிமைத்தனம்தான் அன்பு என்ற ஒரு சிலரின் கருத்தை பெரும்பான்மையானதாக மாற்ற, காட்டக் கூடாது.

**கங்காதேவி, சென்னை (24):**

காதலில் எதையும் விட்டுக்கொடுப்பது சந்தோஷம்தான்; சுதந்திரத்தைத் தவிர. திருமணத்துக்கு முன் இது சாதாரண விஷயமாக இருந்தாலும், பின்னர் இதனால் பிரச்னைகள்தான் பெருகும். அன்பால் கட்டுப்படுத்துவது வேறு; ஆதிக்கம் செலுத்தி அடக்குவது வேறு. செந்தில் தாமரையை அடக்கி வைக்க நினைக்கும் ஆணாதிக்க வாதிதான்.

**பத்ம ப்ரியா, மதுரை (24):**

ஆணும், பெண்ணும் சமம் எனக் கூறினாலும், தன் மனைவி தன்னை விட எல்லாவிதத்திலும் ஒரு படி குறைந்தவராக இருக்கவேண்டும் என்பதுதான் பெரும்பான்மை ஆண்களின் எண்ணம். கதையிலும் தாமரையை ஓர் உடைமையாகத் (possession) தான் செந்தில் மதிக்கிறான்.

* பத்ம ப்ரியா
* கங்காதேவி
* கீதப்ரியா

செய்தி, சித்திரம் : **கார்த்திகா ரஞ்சன்**

**கிருஷ்ணா - *(கதையின் ஆசிரியர்)*** : காதல் ஆதிக்கம் குறித்ததுதான் கதை. காதலில் தனித்தன்மையை இழப்பது நியாயமற்றது. காதலில் மட்டுமல்ல; எந்த ஓர் உறவுமே நம்மைக் கட்டுப்படுத்தும் தளையாகிவிடக் கூடாது. புரிதலுக்கான வாய்ப்புகள் இருக்கும் பட்சத்தில் நம் கருத்தைப் புரியவைக்க முயற்சி மேற்கொள்ளலாம். இல்லையெனில் அவ்வுறவிலிருந்து வெளியேறிவிடுவதுதான் நல்லது. பகிர்தல்தான் வாழ்க்கையே தவிர எதையும் இழத்தல் வாழ்க்கையல்ல. அதைப் புரிந்துகொள்ளும் பருவத்தில் செந்தில் இல்லை. ஆணாகிலும் பெண்ணாகிலும் எந்தச் சூழலிலும் தத்தம் தனித்தன்மைகளை இழக்கத் தேவையில்லை.

சுற்றிலும் கண்ணுக்கெட்டிய தூரம் வரை கோரைப் புல்லும், காட்டுச் செடிகளும், முட்புதர்களுமாய் அடர்ந்து மொத்த நிலமும் பாழ்பட்டுக் கிடக்க, காளியப்பனின் ஒரு துண்டு நிலம் மட்டும் அடையாளத்துக்காக பத்தடிக் கொரு கல் தூணும் அவற்றை இணைத் துக் கட்டிய முட்கம்பி வேலியுமாய்ப் பிரிக்கப்பட்டு, உள்ளே பச்சைப் பசே லேன்று ஒரு சொர்க்கத்தையே சிருஷ் டித்து வைத்தது போலிருந்தது! பர மேஸ்வரன் டெல்லியிலிருந்து கிளம்பி வந்த காரியத்தையே மறந்து அந்தத் தோப்பைப் பார்த்து மலைத்துப் போய் நின்றார்.



சென்னையிலிருந்து 40 கி.மீ. தொலைவில் வண்டலூர் - கேளம் பாக்கம் நெடுஞ்சாலையில் கொஞ்சம் உள்ளடங்கி பரந்து விரிந்து கிடக் கிறது சுமார் முன்னூறு ஏக்கர் நிலம். சுற்றிலுமிருக்கிற நிலங்களையெல் லாம் கே.ஜே.எம். நிறுவனம் ஏற் கெனவே காசுகொடுத்து கையகப் படுத்திவிட்டது. அடுக்குமாடி வீடு களும், தகவல் தொழில்நுட்பப் பூங் காக்களுமாய் வானத்தை எட்டிப் பிடிப்பது மாதிரியான உயர உயர மான கட்டிடங்களாக நிர்மாணிக்க உத்தேசித்திருக்கிறார்கள். இந்தப் பகுதி யின் முகமே மாறப் போகிறது. அதற்குப் பெரிய முட்டுக்கட்டையாக இருப்பது காளியப்பன்தான். அவர் தன்னுடைய நிலத்தை கே.ஜே.எம். கம்பெனிக்கு விற்க பிடிவாதமாய் மறுத்துக் கொண்டிருக்கிறார். பரமேஸ்வரன் அவரைச் சமாதானப்படுத்த வந்திருக்கிறார்.

கான்கிரீட் குடிலின் படியேறி இரு வரும் மேலே போனார்கள். வாசற்கதவு திறந்துதான் இருந்தது. ஆனாலும் ஆட்கள் யாரும் தென்படவில்லை. சத்தம் கொடுக்க லாமா என்று யோசித்துக் கொண்டிருந்த போது, தூக்கிச் சொருகிய சேலையுடன் பரபரப்பாய் அலைந்து கொண்டிருந்த ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி, இவர்களைப் பார்த்ததும் சேலையைக் கீழே இறக்கி விட்டு அருகில் வந்து, ''யாரு வேணுங்க...?'' என்றாள் பணிவுடன்.

''மிஸ்டர் காளியப்பன்...'' என்று ராம்நாத் இழுத்தார்.

''அவர் வீட்ல இல்லீங்களே, என்ற



# நிலமென்னும் நல்லாள்

சோ.சுப்புராஜ்

வாறே வந்து தூரமாய் விரல் சுட்டி, ''அதோ அங்க பம்பு செட்ரும் இருக்கு பாருங்க; அதுக்குப் பக்கத்துல இருக்கற வேப்ப மரத்து நெழல்ல தான் உட்கார்ந்திருப் பாரு...'' என்றாள்.

இருவரும் கீழே இறங்கி நடக்கத் தொடங்கினார்கள். நிலம் பசுமை போர்த்தி விஸ்தாரமாய் விரிந்து கிடந்தது.

**வே**ப்பமரத்துக் காற்று சிலுசிலு வென்றிருந்தது. பம்ப் செட்டிலிருந்து தண்ணீர் சீறிப் பாய்ந்து கொண்டிருந்தது. காளியப்பன் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்தபடி கீழே உட்கார்ந்திருந்த கூன் விழுந்த வயதான பெண்மணிக்கு வெற்றிலை இடித்துக் கொடுத்துக் கொண் டிருந்தார்.

''உங்க நில விஷயமா பேசத்தான் வந்தோம்...'' பரமேஸ்வரன் நேரிடையாக விஷயத்துக்கு வந்தார்.

''அப்பவே நான் ஸார்கிட்ட சொல்லிட் டனே, அதை எப்பவுமே நான் விக்கிறதா இல்லன்னு...'' என்றார் காளியப்பன்.

''நீங்க கொஞ்சம் உங்க முடிவை மறு பரிசீலனை பண்ணனும்; எல்லாருக்கும் செண்ட்டுக்கு முப்பதாயிரம்னு கொடுத் துத்தான் கெரயம் பண்ணுனோம்; உங்க நிலத்துக்கு அம்பது தர்றோம்; வீடுகள் கட்டி முடிச்சதும் உங்க குடும்பம் குடியிருக்க ஃப்ரீயாவே ஒரு வீடு வேணும் னாலும் தர்றோம்; இப்பல்லாம் விவசா யத்துல என்ன வருமானம் வருது? போட்ட முதலே திரும்புறதுல்ல. அதை வச்சு நீங்க வேற ஏதாவது பிஸினஸ் பண்ணலாம்; எதுல போட்டாலும் விவ சாயத்துல வர்றதை விட கண்டிப்பா அதிகமா வருமானம் வரும்...''

''இதைப் பாருங்க ஸார்; விவசாயத்தை லாப நஷ்டக் கணக்கு பார்க்கிற தொழிலா நாங்க நடத்தல; அது ஒரு வாழ்க்கை

முறை; அது இல்லாட்டா செத்துப் போயிடுவோம் சார்...''

''கொஞ்சம் சென்டிமென்ட்டை எல்லாம் தள்ளி வச்சுட்டு யோசிங்க மிஸ்டர் காளி யப்பன்; காலத்துக்கு ஏத்த மாதிரி மாற வேண்டாமா? எல்லாத்துக்குமே பயன் பாடுன்னு ஒண்ணு இருக்குல்ல...''

''அப்படி வாழ்க்கையில் எல்லாத்தையும் பயன்பாட்டை மட்டும் வைச்சுப் பார்க்க முடியாது ஸார்... இதோ எங்கம்மாவுக்கு தொண்ணூற்று மூணு வயசாகுது; இனிமே பயன்பாடுன்னு பார்த்தா ஒண்ணுமே இல்ல, என்ன பண்ணலாம்? வெளில வீசிடலாமா, இல்லை மூச்சைப் பிடிச்சுக் கொன்னுடலாமா? உங்களை மாதிரி படிச்சவங்க அதையும் நியாயப் படுத்துவீங்க; கருணைக் கொலைன்னு. ஆனா எங்க மனசு ஒப்புக்காது ஸார். நெலத்தை விலைக்குக் கேட்டுக்கிட்டு இனி ஒரு முறை தயவு பண்ணி இங்க வராதீங்க...'' கை கூப்பி வழி அனுப்பி வைத்தார் காளியப்பன்.

**தொண்ணூற்று மூணு வயசாகும் அம்மாவை பயன்பாடு இல்லேன்னு, வெளியில வீசிடலாமா, இல்லை மூச்சைப் பிடிச்சுக் கொன்னுடலாமா?**

அந்தப் பகுதியில்தான் தகவல் தொழில்நுட்பப் பூங்கா அமைக்க உத்தேசிக்கப்பட்டு அதற்கான பூர்வாங்க வேலைகள் எல்லாம் முடிந்து விட்டன. இந்நிலையில் ப்ளானை மாற்றினால் இதில் முதலீடு செய்திருப்பவர்கள் நம்பிக்கை இழப்பார்கள். கம்பெனி ஷேர்களின் விலை சரியும். அப்புறம் சேர்மனிடம் முகங்காட்டவே முடியாது.

அலுவலகத்தில் உட்கார்ந்து நிலம் சம்பந்தப்பட்ட ஆவணங்களைப் பார்த்துக் கொண்டிருந்தபோது பரமேஸ்வரனுக்கு அந்த ஆச்சரியம் கவனத்துக்கு வந்தது. வில்லங்கம், பட்டா, அடங்கல் என்று எல்லா ஆவணங்களிலும் நிலத்தின் உரிமையாளராக சேதுராம அய்யர் என்பவரின் பெயரே இருந்தது. 1925க்கப்புறம் நிலம் கை மாறவே இல்லை. உற்சாகத்தில் துள்ளிக் குதித்து, ராம்நாத்தை அழைத்து, ''டாக்குமெண்ட்படி காளியப்பனுக்கோ அவரோட வாரிசுகளுக்கோ நிலத்துல எந்த பாத்தியதையுமே இல்லையே! நாம இதைச் சாதகமா பயன்படுத்தி சேதுராம அய்யரோட வாரிசு யாரையாவது கண்டு பிடிச்சுட்டோம்னா, அவங்க மூலம் நெலத்தை நம்ம கம்பெனிக்கு எழுதி வாங்கிக்கலாம். இனியும் காலந்தாழ்த்தாம உடனே அவரோட வாரிசைத் தேடுங்க...'' என்றார் பரமேஸ்வரன்.

ஊருக்குள் அலைந்து வயதான கிழவர்கள் ஒருவர் விடாமல் விசாரித்ததில் மின்மினி மாதிரி ஒரு புள்ளி வெளிச்சம் தெரிந்தது. இந்திய சுதந்திரத்துக்குப் பிறகு சேதுராம அய்யரின் குடும்பம் மத்திய சர்க்காரில் உயர்ந்த உத்தியோகங்கள் பெற்று டெல்லிக்குக் குடி போனார்கள் என்று. அதைத் தொடர்ந்து பிரயாணித்ததில் சேதுராம அய்யரின் கொள்ளுப்பேரன் ஒருவன் நடேசன் என்ற பெயரில் இப்போது மும்பையில் வசிப்பதாகத் தகவல் கிடைத்தது. தேடிக் கண்டு பிடித்தார். தாராவி பகுதியில் சிதிலமடைந்து கிடந்த ஒரு பழைய வீட்டில் தன்னுடைய தாய், மனைவி மற்றும் இரண்டு குழந்தைகளுடன் அன்றாட வயிற்றுப்பாட்டுக்கே அல்லாடுகிற வறிய நிலையில் வாழ்ந்து கொண்டிருந்தார் நடேசன்.

''உங்க ஃபேமிலி பிராப்பர்ட்டியில இன்னும் விற்கப்படாம ஒரு நாலரை ஏக்கர் விவசாய நிலம் மட்டும் இருக்கு; அனாமத்தா ஒருத்தன் அனுபவிச்சுக்கிட்டு

இருக்கான்... சென்னை வந்து உங்க நிலத்தை எங்க கம்பெனிக்கு எழுதிக் கொடுத்திங்கன்னா, உங்களுக்கு ரெண்டு கோடி ரூபாய் கெடைக்கும்'' பரமேஸ்வரன் சொல்லச் சொல்ல நடேசனின் முகம் பிரகாசமானது.

இருவரும் விமானத்தில் கிளம்பி உடனே சென்னைக்கு வந்தார்கள். நிலத்தை ரெஜிஸ்டர் பண்ணுவதற்கு முன்னால், நிலத்தையும் அதை இப்போது அனுபவிப்பவர்களையும் பார்க்க வேண்டுமென்று நடேசன் ஆசைப்பட்டதால், முதலில் அவர்கள் காளியப்பனின் வீட்டுக்குப் போனார்கள். அந்த வீட்டின் வரவேற்பறை சுவரில் ஒரு பெரிய போட்டோவின் கீழ்ப் பகுதியில் சேதுராம அய்யர் என்று பெயரெழுதியிருந்தது. படத்திலிருந்தவரின் முகச்சாயல் நடேசனின் முகத்தை ஒத்திருந்தது. காளியப்பனுக்கு நடேசனைப் பார்த்ததும் ஆச்சர்யமாக இருந்தது.

**அ**து 1930களின் பிற்பகுதி. சூரியன் கண்விழிக்க நிறைய நேரமிருந்த ஒரு நடுநிசியில், இருளாண்டிப் பகடை தன் மனைவி, மகன் மற்றும் புது மருமகளுடன் இரத்தின மங்கலத்திலிருக்கும் சேதுராம அய்யரின் வீட்டுக்கு முன் மிக மெதுவாக ''சாமி... சாமி...'' என்று குரல் கொடுத்தார். எழும்பி வந்த சேதுராம அய்யர், தன்னுடைய பண்ணையாள் வேளைகெட்ட நேரத்தில் குடும்பத்துடன் நிற்பதைப் பார்த்துப் பதறிப்போய், ''என்னடா, இந்த நேரத்துல?'' என்றார்.

''எங்க ஜாதிக்காரப் பயல் ஒருத்தன் சம்சாரி வீட்டுப் பொண்ண இழுத்துட்டு ஓடிட்டானாம் சாமி... காவக்கார தேவரும் மத்த சம்சாரிகளும் சேரிக்குள்ள பூந்து எங்க குடிசைகளை எல்லாம் கொளுத்திட்டாங்க; அப்புட்ட ஆட்களையும் கண்ணு மண்ணு தெரியாம அடிச்சு நொறுக்கிக்கிட்டிருக்குறாங்க... அதான் எல்லோரும் உயிர் பொழச்சாப்போதுமின்னு ஊரைக் காலி பண்ணிட்டுப் போறோம் சாமி... சாமிகள் கிட்ட ஒரு வார்த்தை சொல்லிட்டுப் போயிடலாம்னுட்டு...''

''அண்டிப் பொழைக்கிற ஊரை விட்டுட்டு எங்கடா போவீங்க?'' அய்யர் கரிசனமாய்க் கேட்கவும் இருளாண்டி, ''தெரியல சாமி...'' என்று ஒப்புச் சொல்லி அழத் தொடங்கிவிட்டான். ''அழறதை நிறுத்துடா மடையா... நீ ஊரை விட்டெல்லாம் போக வேண்டாம்; நம்ம ஏரிக்கரைத் தோப்பு நெலத்துல போயி குடிசை போட்டுத் தங்கிக்க...'' என்றார்.

அன்றிலிருந்து இருளாண்டியின் குடும்பம் அய்யரின் தோப்பிலேயே தங்கிக் கொண்டு அவரின் விவசாய வேலைகளை எல்லாம் செய்தார்கள். அய்யரின் மேலி

''வோட்டுப் போடற இடத்தை ஏன் வாக்குச் சாவடின்னு சொல்றோம்?''

''ஜெயிச்ச பிறகு தேர்தலுக்கு முன்னாடி கொடுத்த வாக்கை 'சாவடி'ச்சுடறாங்களே... அதான்..!''

- அதிரை புகாரி



ருந்த மரியாதையால் சம்சாரிகளும் இந்த ஏற்பாட்டைக் கண்டும் காணாமல் இருந்து விட்டார்கள்.

இந்தியாவுக்கு சுதந்திரம் வந்த கையோடு அய்யரின் ஒரே பையனுக்கு டெல்லியில் மத்திய சர்க்காரில் வேலை கிடைத்து அவன் அங்கு போகவும், பையனை விட்டுப் பிரிந்திருக்க முடியாத அய்யர் எல்லா சொத்துக்களையும் விற்றார்.



''என் பின்னாடி சுத்தாத பொண்ணுங்களே இல்லடா!''

''தெரியும்டா... எல்லார்கிட்டேயும் கடன் வாங்கி வெச்சிருக்கியே!''

- சிக்ஸ் முகம்

கடைசியில் இருளாண்டியின் குடும்பம் குடிசை போட்டுத் தங்கியிருந்த ஏரிக்கரைத் தோப்பு நிலம் மட்டும் மீதமிருந்தது. அய்யர் இருளாண்டியை வீட்டுக்கு அழைத் தார்.

''உங்களை நிர்க்கதியா விட்டுட்டுப் போக மனசு கேட்கலடா... பேசாம நீ இப்ப இருக்கிற அந்த நெலத்த நீயே எடுத்துக்கடா...''

''அய்யோ சாமி, என்கிட்ட ஏது அவ்வளவு பணம்?''

''நான் முடிவு பண்ணிட்டேன்டா; அதை உனக்கு நான் தானமா தர்றதா ஏற்கெனவே பத்திரம் எழுதியாச்சு... இந்தா பத்திரமா வச்சுக்கோ...'' என்று மடியி லிருந்து ஒரு பத்திரத்தை எடுத்துத் தரவும், ''சாமி...'' என்றபடி அவரின் கால்களில் விழுந்தான்.

சம்சாரிகள் எல்லாம் திரண்டு வந்து அய்யரிடம் சண்டை போட்டார்கள். அவர் களைச் சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தார். ஆனாலும் ஆரம்பத்தில் இருளாண்டிக்கு அவர்கள் நிறைய தொந் தரவு கொடுத்தார்கள். போராடித்தான் தங்களை நிலை நிறுத்திக் கொண்டார்கள்.

**க**தை போல நிலம் தங்கள் கைக்கு வந்த வரலாற்றைச் சொல்லி, காலத்தின் சுசங்கலும் பழுப்புமேறிக் கிடந்த, சேது ராம அய்யர் தன் பாட்டனுக்கு எழுதிக் கொடுத்த பத்திரத்தை எடுத்து நடேசனிடம் கொடுத்தார் காளியப்பன். ''இதெல்லாம் செல்லாது மிஸ்டர் நடேசன். ரெஜிஸ்டர் ஆபீஸ்ல இந்தப் பத்திரம் பதிவு பண் ணப்படவே இல்ல...'' அவசரமாய்ச் சொன் னார் பரமேஸ்வரன்.

நடேசன் சேதுராம அய்யரின் கையெழுத்தைக் கைகளால் மெதுவாய் வருடினான். கண்ணீர் வழிந்தது. நடேசன் நா தழுதழுக்க...

''மன்னிக்கணும் மிஸ்டர் பரமேஸ் வரன். எங்க மூதாதையரின் ஆசிபெற்ற காளியப்பனே இந்த நெலத்தைத் தொடர்ந்து அனுபவிக்கட்டும். அதுதான் முறை. கடவுள் வேற நல்ல வழியை எங்களுக்குக் காட்டுவார். நீங்க உங்க பிளான்ல மாற்றம் பண்ணிக்குங்க...'' பேசிக் கொண்டே வெளியேறினான்.

போட்டோவில் சேதுராம அய்யர் சிரித்தபடி இருந்தார். ●

# மதுரையை மாற்றுவாரா அழகிரி?

● எம்.எஸ்.கே. அருள், பெரிய திருக்கோணம் ☐

? ஞான பூமி என்று சொல்லப்படும் இந்திய நாட்டில் இன்று ஒரே கலவரம், லஞ்சம் சூழ்ந்துள்ளதே?

! 'ஞான பூமி' என்பது முற்றிலும் சரிதான். நாம்தான் ஞானக் கண்ணை இழந்து, ஊனக் கண்ணால் எல்லாவற்றையும் பார்க்கிறோம். அதனால்தான் வியன்னாவில் சிக்கிய மதப் பிரிவினரிடையே நடந்த கலவரம் - வன்முறை, பஞ்சாபில் பெரிதாக எதிரொலித்து ஊரடங்கு உத்தரவைக்கூட அவசியமாக்குகிறது.



✱ மாறுமா மாற்றம்?



✱ கவனிக்கத்தக்க வெற்றி

● க.வசுமதி, வேங்கைவாசல்

? ராணுவத்தினருக்குப் பயிற்சி அளிக்கும் காலத்தில், பாலியல் பலாத்காரம் செய்வது தவறில்லை என கற்றுக் கொடுப்பார்களா என்ன? சமீபத்திய உதாரணம் இலங்கையில் சிங்கள ராணுவம் தமிழீழப் பெண்களிடம் நடந்து கொண்டது. தூரத்திய உதாரணம், இந்திய அமைதிப்படை ஈழத் தமிழ்ப் பெண்களிடம் நடந்து கொண்ட முறை.



✱ திருப்பித்த விஷயம்

! ராணுவத்தில் அளிக்கப்படும் பயிற்சி, உடலுடன் மனத்தையும் கடினப்படுத்த வல்லது. கையில் ஆயுதம் ஏந்தும் உரிமையும் வழங்கப்படுகிறபோது, மனக்கட்டுப்பாடு தறிகெட்டுப் போகிறது. இது உலகளாவிய நிலை.

● பவானி கிருஷ்ணா, பெங்களூரு

? தம்பதிகள் தினம் ஒரு முறை 'ஐ லவ் யூ' என்று சொல்லிக் கொண்டால், பாசிடிவ் எனர்ஜி கூடும். குடும்பம் நிம்மதியாக இருக்கும் என ஓர் ஆய்வு கூறுகிறதாமே?

! வார்த்தைகளால் மட்டும் வந்துடாதுங்க பாஸிடிவ் எனர்ஜி! தினமும் சொல்லிக்கணும்ன்ற கட்டாயம் வர்றப்போ அதுவேகூட வெறும் சடங்

காயிடும். சிந்தையிலேயும் செயலலயும் அன்பு வெளிப்படணும். அதான் முக்கியம்.

● ஏ.சுகுமார், காட்பாடி

*? அரசியல்வாதிகளின் பேச்சுக்கு ஆயுள் எவ்வளவு?*

! வாக்குப் பதிவு முடியும்வரை. (இந்த இதழின் 79-ம் பக்கத்தைப் பாருங்க.)

● எஸ்.பக்கிரிசாமி, திருவாரூர்

*? தேர்தல் வாக்குறுதிகளை நிறைவேற்றாத அரசியல் கட்சிகள் மீது வழக்கு தொடரலாமாமே? உச்சநீதிமன்ற வழக்கு ஒன்றில் தீர்ப்பு இவ்வாறு வெளிவந்துள்ளதே?*

! அந்தப் பருப்பெல்லாம் நம்ம அரசியல்வாதிகள்கிட்டே வேகாது! சட்டம் தடுக்குல பூந்தா அவங்க கோலத்துல பூந்து பாச்சா காட்டுவாங்க! இருந்தாலும், நிறைவேற்றப்படாத வாக்குறுதிகள் குறித்து மக்களின் கவனத்தை ஈர்ப்பது நிகர லாபமாக இருக்கும்.

☐ ரூ.150/- பரிசு பெறுபவர் :
எம்.எஸ்.கே.அருள், பெரிய திருக்கோணம்

● வி.எஸ்.கீர்த்தனா, ஈரோடு

*? 'விழாக்களில் நான் அதிகமாகப் பங்கேற்பதில்லை. பேச்சாளர்கள் மிகையாகப் புகழ்கிறார்கள் அல்லது தங்களைப் பற்றியே பேசிக் கொள்கிறார்கள்'' என்கிறாரே இளையராஜா?*

! சமீபத்திய திரை இசை ஆல்பம் வெளியீட்டு விழாவில் பேசியவர்கள் அவரை இவ்வாறு நொந்து போய்க் கூற வைத்துள்ளனர். வித்தையோடு வினயமும் உள்ள யாருக்குமே ஏற்படக்கூடிய உணர்வு தான் அது.

● சோலோ செல்வாஷ்,
குருவரெட்டியூர்

*? அரசு ஊழியர்களே எலெக்ஷனுக்கு வேலை செய்ய தனியாக ஊதியம் பெறும்போது, வேட்பாளர்கள் வாக்காளர்களுக்குப் பணம் கொடுப்பது எப்படி தவறாகும்?*

! தேர்தல் பணியில் கூடுதல் நேரம் உழைக்கும் அரசு ஊழியர் பணம் பெறுவதற்கும் நாம் வோட்டுப் போட பணம் எதிர்பார்ப்பதற்கும் ஒப்புமை கூறுவது சரியில்லை. வாக்களிப்பது என்பது நமது சுதந்திரத்தையும் குடியாட்சியையும் உறுதி செய்யும் மார்க்கம். அவற்றை நிலைநாட்டவே தேர்தல். வாக்களிக்க நாம் பணம் பெற்றுக் கொண்டால், நம் சுதந்திரத்தை அடகு வைத்து அடிமைகளாகிறோம்.

● கே.தெய்வசிகாமணி,சென்னை-82

*? தமிழகமே வியக்கும்படி மதுரையை மாற்றிக் காட்டுவேன் என்கிறாரே அழகிரி?*


* விளயத்தின் விசனம்!


* அடங்கிய வாசிப்பு

! ஏற்கெனவே நெகடிவ்வாக நிறைய மாற்றிக் காட்டிவிட்டார். இனிமேலாவது எம்.பி. தொகுதி அபிவிருத்தி நிதியைப் பயன்படுத்தி, பாஸிடிவ்வாக மாற்றிக் காட்டினால் நல்லது.

● பி.இசக்கிமுத்து,
வெள்ளானைக்கோட்டை ★

*? பதினைந்தாயிரம் சம்பளம் வாங்கும் அரசுப்பள்ளி ஆசிரியர்கள், தங்களிடத்தில் பத்தாயிரம் ரூபாய்க்கு ஒரு பினாமி ஆசிரியரை நியமித்துவிட்டு*

**'கந்து வட்டி' தொழில் செய்கிறார்களே? இரண்டு கல்வி அமைச்சர்கள் உள்ள கல்வித் துறைக்கு இது தெரியுமா?**

! நன்றாகவே தெரியும். ஆசிரியர் பணியில் அமர ஒரு விலை நிர்ணயிக்கப்பட்டிருப்பதும் தெரியும். அதனால் இது போன்ற முறைகேடுகளைத் தட்டிக்கேட்க முடியாத சூழல் நிலவுவது அமைச்சர்களுக்கும் தெரியும்; நமக்கும் தெரியும்.



★ சிறும்பா ரகசியம்!



★ ஆணவப் பேச்சு!

● **உஷா சுதர்ஷன்,**

**திருச்செங்கோடு**

**? கேரளாவில் ரேஷன் கார்டு தகுந்த ஆவணமாக எடுத்துக்கொள்ளப்பட்டதாக நரேஷ் குப்தா கூறுகிறார். ஆனால், தமிழகத்தில் அதைத் தேர்தல் அதிகாரிகள் ஒத்துக்கொள்ளவில்லையே? ஏன் இந்த முரண்பாடு?**

! போலி ரேஷன் கார்டுகள் இங்கு மிகுதி என்பதால், தமிழகக் கட்சிகள் அதை ஆவணமாக ஏற்க வேண்டும் என்று தேர்தல் கமிஷனிடம் கோரிக்கை வைக்கவில்லை போலும்!

● **எஸ்.ராமசாமி,**

**வடக்குதயிர்பாளையம்**

**? ஆந்திராவிலும் சரி, தமிழ்நாட்டிலும் சரி, நடிகர்கள் கட்சி படுதோல்வி அடைந்துவிட்டது. இந்நிலையில் ரஜினிகாந்தின் அரசியல் பிரவேசம் கேள்விக் குறியா? முற்றுப்புள்ளியா?**

! சிரஞ்சீவியின் வெற்றியை அவ்வளவு சாதாரணமாக ஒதுக்கிவிட முடியாது. கட்சி தொடங்கிய ஆறு மாதங்களில் இருபது எம்.எல்.ஏ.க்கள், ஒரு எம்.பி. என்பது கவனிக்கத்தக்க வெற்றி. விஜயகாந்தும், தாம் ஏதேனும் ஓர் அணி பக்கம் சாய்ந்தால் அந்த அணி மாபெரும் வெற்றி பெறும் என்று நிரூபித்துள்ளார். ரஜினி விஷயம், அவர் சொல்கிறபடி, அவருக்கே தெரியாது.

**★ ரூ.75/- பரிசு பெறுபவர் :**

**பி.இசக்கிமுத்து,**
**வெள்ளாளனைக்கோட்டை**

● **எம்.சம்பத்,**

**வேலாயுதம்பாளையம்**

**? பா.ம.க.வின் தோல்விகளுக்கு தி.மு.க.வின் சதியும் தேர்தல் கமிஷனின் அலட்சியமுமே காரணம் என்றதுடன் நில்லாமல், ராமதாஸ், 'நரேஷ் குப்தா மாடு மேய்க்கப் போகலாம்' என்று கூறியது சரியா?**

! அசிங்கமான ஆணவப் பேச்சு! அதை ஏற்பது என்றால், போட்டியிட்ட அனைத்து தொகுதிகளிலும் தோற்ற பா.ம.க.வின் தலைவரை, என்ன பணியாற்ற, எங்கே அனுப்புவது?

# பேண்ட் போட்ட

''**கா**னா உலகநாதன், திருச்சி லோக நாதன் மாதிரி நானும் மக்கள் மனசுல தனி இடம் பிடிக்கணும்கறதால, என் ஊரு பேரான கொடுக்கூரைச் சுருக்கி, என் பேருக்கு முன்னால சேர்த்துக்கிட்டேன். ஏதோ பிறந்தோம், ஏதோ வளர்ந்தோம்னு இல்லாம, இந்த சமுதாயத்துக்கு நம்மால முடிஞ்ச அளவு நல்லது செய்யணும்னு ஒரு லட்சியப் பயணத்தோட பதினைந்து வருஷங்களுக்கு முன்னாடி கிராமத்தை விட்டுப்புட்டு சென்னைக்கு வந்தவன் நான்'' என கிராமியப் பாடல்களைப் போலவே இயற்கை மணம் மாறாமல் பேசுகிறார் நாட்டுப்புற இசைக் கலைஞர் கொடுக்கை லோகநாதன்.

''நமக்குத் தெரிஞ்சதெல்லாம் பாட்டு மட்டும்தான். பத்தாம் வகுப்பு முடிச்சப்புறம் என்னைத் தொழிற்கல்வி படிப்புல சேர்த்து விட்டாங்க... ஆனா என் நாட்டமெல்லாம் இசையிலேயே இருந்ததால அதை விட்டுப் புட்டு சென்னை இசைக் கல்லூரியில சேர்ந் தேன். அங்கே கர்நாடக சங்கீத வகுப்புப் பாடம் சில மாதங்கள் கத்துக்கிட்டேன். அது நெருக்கமா மனசுல ஒட்டலை. கிரா மியப் பாட்டையே மனசு வண்டாட்டம் சுத்திச்சு. அதனால கர்நாடக சங்கீதத்தை விட்டுட்டு அப்படியே கிராமிய இசை கத்துக்கக் கிளம்பிட்டேன். நான் பாட்டை எழுதி அதுக்கு மெட்டும் போட்டுடுவேன்.

பாட்டை எப்படி வேணா எழுதலாம் தான். ஆனா பாட்டு மூலமா கெட்ட விஷயங்களுக்கு வேட்டு வெச்சு நல்ல விஷயத்தை விதை மாதிரி தூவறதுதான் முக்கியம். 2002ல அண்ணா எம்.ஜி.ஆர் ... -- 



பண்பலை வரிசைல முதன்முதலா என்னைப் பாடக் கூப்பிட்டாங்க. அந்த இசை நிகழ்ச்சிக்கு ஏகப்பட்ட பாராட்டுக்கள் குவிந்தன. நம்மாலேயும் நல்லா பாட முடியும்ன்னு எனக்குள்ள ஒரு தன்னம்பிக்கையை ஏற்படுத்திக் கொடுத்தது அந்த நிகழ்ச்சிதான்.

**சமீபத்தில் நீங்கள் தி.மு.க. கட்சிக்காக பிரசாரப் பாடலில் ஈடுபட்டீர்கள். ஒரு**



• டி.வி. நிகழ்ச்சியில்

# தெம்மாங்கு!

**கலைஞர் இப்படி கட்சி சார்ந்த பாடல்களைப் பாடலாமா?**

''அதைக் கட்சி சார்ந்த பாடல் என்றே சொல்ல முடியாது. என்னைப் போன்ற 150 ஏழை மாணவர்கள் கல்வி பயில வழிவகுத்தவர் டி.கே.எஸ். இளங்கோவன். அது ஒரு நன்றிக்கடன். அந்த சாதனைப் பாடலில் தனிப்பட்ட முறையில் கலைஞரின் சாதனையையோ கட்சி சம்பந்தப்பட்ட பணிகளையோ நான் சொல்லவில்லை. பிற்காலத்தில் இதுபோல் கட்சிப் பிரசாரத்துக்காகப் பாட மாட்டேன்.''

**மேற்படிப்பு படிப்பதற்காக சென்னைக்குள் நீங்கள் காலடி எடுத்து வைத்தபோது சென்னை உங்களை மிரள வைத்ததா?**

''நிறையவே மிரள வைத்திருக்கிறது. அதே சென்னை இப்பொழுது என்னை அரவணைக்கிறது. என் பெற்றோர் தேர்ந்தெடுத்த தொழிற்கல்வியை விட்டுவிட்டு இசையின் பக்கம் சென்று விட்டதால், அவர்களுக்கு என் மீது கடும் கோபம் இருந்தது. ஒருவேளை சாப்பாட்டுக்குக் கூட சரியான வழி கிடைக்காமல் திண்டாடிய காலங்கள் எல்லாம் உண்டு. ஆனால் எல்லாவற்றையும் தன்னந்தனியாக என் சொந்தக் காலில் நின்றுதான் சமாளித்தேன்.

இசைக் கல்லூரியில் சேர்ந்தபோது, பணக்கார வீட்டுப் பசங்களாக வருவாங்க. எனது பாட்டும் ஆட்டமும்தான் நிறைய நண்பர்களைத் தேடிக் கொடுத்தன. 'ஒரு சொட்டு தண்ணீர்'ங்கற ஆவணப் படத்துலேயும், 'கல்லூரி'ங்கற திரைப்படத்துலேயும், 'தெருக்கோடி'ங்கற குறும்படத்துலேயும் பாடியிருக்கேன். இப்பதான் முடியெல்லாம் வெட்டி பேன்ட் போட்டு மெட்ராஸ் ஆளா மாறியிருக்கிறேன். குரலும் புத்தியும் மட்டும் இன்னும் அதே கொடுக்கைதான்'' என்று சொல்லும் லோகநாதனுக்கு கிராமிய மணம் மாறாத சினிமா பாடல் பாட ஆசையாம்.

- நளினி சம்பத்குமார்

**''கிராமியப் பாட்டையே மனசு வண்டாட்டம் சுத்திச்சு.''**



''வேட்டையாடு விளையாடு! விருப்பம்போல உறவாடு! வீரமாக நடையைப் போடு'' என்றொரு திரைப்படப் பாடல் உண்டு. ஆனால் வேட்டையை விளையாட்டுத்தனமாகவோ விருப்பம் போலவோ செய்துவிட முடியாது. மிக நுட்பமான விதிமுறைகளைக் கடைப்பிடிப்பவர்தான் காட்டுக்குள் சென்று காயமில்லாமல் திரும்ப முடியும்.

வேட்டைக்கார சுவாமி கோயில் கொண்டதால் வேட்டைக்காரன்புதூர் என்று பெயர் பெற்ற அந்த கிராமம், சேர மன்னனின் படைகள் பாண்டி நாட்டுக்குச் சென்ற பாதையில் அமைந்துள்ளது. வேட்டை வீரர்கள் அமர்ந்து சாப்பிட அன்னப்பாறை, யானைகளைப் பிடிக்கப் பயன்பட்ட யானைபிடி கொப்பம், காட்டுக்குள் புகுவதற்கு முன்னால் கும்பிடும் வேட்டைக்கார சுவாமி கோயில், பாரம்பரியச் சிறப்புமிக்க காளியம்மன் கோயில் என்று வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்கள் எத்தனையோ உண்டு.



# காத்திருப்பது

முத்துமாணிக்கம் தனிச்சிறப்பு மிக்க வேட்டைக் கலை வல்லுநராக இளம் பருவத்திலேயே உருவாகக் காரணமாய் இருந்தவர், அவரது மைத்துனராகிய ஊத்துக்குளி ஜமீன்தார்தான். வேட்டைக் கலைக்கு மட்டுமின்றி வாழ்க்கைக் கலைக்கும் அவரே இவருடைய வழிகாட்டி. ஆறரை அடி உயரமும் கம்பீரமான தோற்றமும் கொண்ட ஊத்துக்குளி ஜமீன்தார், பண்பாட்டின் நிறைகுடமாகவும் விளங்கியவர். இவருடைய இயற்பெயர் அகத்தூர் முத்துராமசாமிக் காளிங்கராயர். மனிதர்களிடையே பேதம் பாராமையும் காலந் தவறாமையின் முக்கியத்துவத்தையும் இவரது நடைமுறையிலிருந்து உள்வாங்கிக் கொண்டார் முத்துமாணிக்கம்.

முத்துமாணிக்கத்தின் மேல் மிகுந்த பிரியம் கொண்ட மற்ற ஜமீன்தார்களில் குறிப்பிடத்தக்கவர் புரவிபாளையம் ஜமீன்தாராகிய கோபண்ண மன்றாடியார். சிவாஜி கணேசன் என்றால் அவருக்கு உயிர். வேட்டையிலும், சாவக்கட்டு என்றழைக்கப்படும் சேவல் சண்டையிலும் மிகுந்த ஆர்வம் கொண்டவர் அவர். கொங்கு மண்டலத்தை அந்தக் காலங்களில் மத்தியப் பகுதி - தெற்குப் பகுதி - வடக்குப் பகுதி என்று மூன்றாகப் பிரித்திருப்பார்கள். வடக்குப் பகுதியில் வனப்பிரதேசங்களில் இருக்கும் 200 ஊர்களுக்கும் முடிசூடா மன்னனாக விளங்கியவர் அவர். அந்த வனப்பகுதிகளிலேயே ஆண்டுக்கு ஆறு மாதங்களாவது திக்விஜயம் செய்து கொண்டிருப்பார் புரவிபாளையம் ஜமீன்தார்.

இவர்களெல்லாரும் முத்துமாணிக்கம் மீது கொண்ட அன்பாலும் சிவாஜியின் பழகும் பண்பாலும், சிவாஜியைத் தங்கள் அன்புக்கடலில் திளைக்கச் செய்தனர். தன்னுடன் வேட்டைக்கு வரத் தொடங்கி சில நாட்களிலேயே வேட்டை விதிகளை மிகத் துல்லியமாய் உள்வாங்கிக் கொண்டு சிவாஜி ஒத்துழைத்த நேர்த்தி கண்டு வியந்து போனார். எதையும் கிரகிக்கும் ஆற்றல் அவரை இதையும் கிரகிக்கச் செய்தது போலும்.

**வ**னப்பகுதியில் ஆட்டைக் கட்டி வைத்து அதைச் சாப்பிடவரும் சிறுத்தையை மறைந்திருந்து வீழ்த்துவது என்று

ஒற்றைவரியில் எழுதிவிடலாம். ஆனால் அது அவ்வளவு சாதாரணமான விஷயமல்ல. தான் ஏற்கெனவே அடித்து வீழ்த்திய இரையைச் சாப்பிட சிறுத்தையோ புலியோ வருகிறதென்றால், சுற்றுப்புறங்களில் சின்னஞ்சிறிய மாற்றம் தென்பட்டால் கூட உன்னிப்பாகக் கண்டறிந்துவிடும்.

இரைதேடி வரும் விலங்குகளை வீழ்த்த, உயர்ந்த மரங்களில் ஒரு பரண் அமைப்பார்கள். இதற்கு மெச்சான் என்று பெயர். தனது இடத்தில் ஒரு கிளை சற்று வளைந்தாலும் கூட இந்த விலங்குகள் கண்டு பிடித்துவிடும். நடந்துகொண்டே இருக்கிறபோது ஏதேனும் சிறிய ஓசை எழுப்பினால்கூட, உயர்த்திய காலைத் தரையில் வைக்காமல் சுற்று முற்றும் பார்த்து, ஏதும் ஆபத்தில்லை என்பதை உறுதி செய்துகொண்ட பிறகே



# தனி கலை!

அடுத்த அடியை எடுத்துவைக்கும்.

வெகு தூரத்தில் மனிதர்கள் வந்தாலும் அந்த வாடையை விலங்குகள் இனங் கண்டுவிடும். காட்டில் கேட்கும் திறன், பார்க்கும் திறன் எல்லாமே சற்றுக் கூடுதல் தான். இது விலங்குகளுக்கு மட்டுமல்ல. காட்டில் இருக்கிற மனிதர்களுக்கும்தான்.

ஒருமுறை முத்துமாணிக்கம் வனவாசியாகிய பொம்மனை ஜீப்பில் அமர வைத்துக்கொண்டு மசினகுடி அருகிலுள்ள ஆனைக்கட்டி அருகே ஜீப்பில் போய்க் கொண்டிருந்தார். திடீரென்று பொம்மன், ''துரை! வண்டியை நிறுத்துங்க! பிலிவாசம் அடிக்குதுங்க'' என்றான். அவன் சொன்னது 'புலியின் வாசம்'. 'புலிவாசமா?' என்று சந்தேகத்தோடு முத்துமாணிக்கம் ஜீப்பை நிறுத்தினார்.

சடாரென்று குதித்த பொம்மன், புலியின் கால்தடம் தேடிக் கண்டுபிடித்த அதே விநாடி, தூரத்தில் சென்றுகொண்டிருந்த புலியைப் பார்த்தார் முத்துமாணிக்கம். மேற்கே சூரியன் மறைகிற நேரமிது. நட்ட நடுப்பாதையில் சென்று கொண்டிருந்த புலி இவர்களைத் திரும்பிப் பார்த்தது. மௌனமாக பொம்மனை உஷார்படுத்தினார் முத்துமாணிக்கம்.

மரபின்மைந்தன் முத்தையா

திரும்பிப் பார்த்து தன் வாலை முறுக்கிய புலி, 'போனால் போகிறது பிழைத்துப்போங்கள்' என்பதுபோல் வேறு திசையில் நடந்து மறைந்தது.

வனவாசிகளைப் போலவே வேட்டை நாய்களுக்கும் வெகுதூரத்திலேயே விலங்குகளை மோப்பம் பிடித்துவிடும் நுண்ணறிவு உண்டு.

தேர்ந்த வேட்டைக்காரர்கள் முயலைப் பிடித்தால் அதன் காதுகளைப் பற்றித் தூக்குவார்கள். அதன் கைகால்களைப் பற்றி, அவை உரசினால், நகம் பட்டு நம்முடைய சதை பிய்ந்துவிடும்.

துப்பாக்கிகளைச் சரியாகப் பிடித்துப் பிரயோகம் செய்யாவிட்டால் சுடும்போது எதிர்த்திசையில் எம்பி மனிதனைக் கீழே தள்ளுகிற ஆபத்தும் இருக்கிறது. விலங்கு, துப்பாக்கி, இரண்டிலிருந்தும் தப்ப வேண்டிய வாழ்க்கை வேட்டைக்காரனின் வாழ்க்கை.



**முத்துமாணிக்கம் 500 எக்ஸ்பிரஸ்ஸில் சுடச் சுட எதிர்த்துவந்த காட்டெருமை மூன்றாவது குண்டில் அருகில் விழுந்தது.**

இன்னொருமுறை சிவாஜிகணேசனை அழைத்துக்கொண்டு வேட்டைக்குப் போனபோது ஒரு சம்பவம். காலை ஐந்தரை மணியளவில் புறப்பட்டுப் போயிருந்தார்கள். அதிகாலைப் பொழுதின் லேசான வெளிச்சத்தில் விலங்கு நடந்த வழித்தடம் தெரிந்தது. வழித்தடத்தைப் பின்பற்றி முத்துமாணிக்கம் நடந்தார். பின்னே சிவாஜிகணேசன் தொடர்ந்தார். நிமிர்ந்து பார்த்தால் எதிரே ஒரு காட்டெருமை. அதுவும் இவர்களைத் தலை தூக்கிப் பார்த்தது. 318 ரைஃபிளில் நெற்றிப் பொட்டைப் பார்த்துச் சுட்டதில் தோட்டா பட்டுத் தெறித்தது. ஆக்ரோஷமாய் எதிர்த்து வந்தது காட்டெருமை. சுதாரித்துக்கொண்ட முத்துமாணிக்கம் 500 எக்ஸ்பிரஸ்ஸில் சுடச்சுட எதிர்த்து வந்து, மூன்றாவது குண்டில் அருகில் விழுந்தது.

மெச்சானில் அமர்ந்து புலிகளைச் சுடுவதற்குக் காத்திருப்பது தவிக்கவலை. அதில் முத்துமாணிக்கத்துக்கு நிறைய அனுபவம் உண்டு. சம்மணமிட்ட நிலையில், ஆடாமல் அசையாமல் ஐந்து மணி நேரங்கள்கூட அமர்ந்திருக்க வேண்டி வரும். தும்மவோ இருமவோ கூடாது. பேச்சே ஆகாது. தூங்கி விழுந்தாலும் ஆபத்து. சிறிய வித்தியாசத்தையும் புலி கண்டுபிடித்துவிடும். சில நேரங்களில் இரையை அடித்து வீழ்த்திவிட்டு பக்கத்தில் எங்காவது மறைந்திருக்கும். எனவே வேட்டைக்காக மெச்சான் அமைத்துத் தரும் முத்துமாணிக்கத்தின் பணியாளர்கள், மெச்சான் மீது இவர்கள் ஏறி அமர்ந்ததும் வேண்டுமென்றே உரக்கப் பேசிக்கொண்டே அந்த இடத்தை விட்டு அகல்வார்கள்.

வேட்டைக்காரன்புதூரில் மட்டுமின்றி வேறு சில காடுகளிலும் மெச்சான் அமைத்து புலி வேட்டை நிகழ்த்திய சம்பவங்கள் நிகழ்ந்ததுண்டு. அதில் மறக்கவே முடியாத அனுபவம் ஒன்று ஆந்திர மாநிலத்தில் உள்ள ஆதிலாபாத் மாவட்டத்தில் உள்ள காடுகளில் ஒருமுறை நிகழ்ந்தது.

(தொடரும்)

# மணக்காலில் கும்பாபிஷேகம்

ராமமிச்ரர் என்ற திருநாமமுடைய மணக்கால் நம்பி, திவ்யப்ரபந்தத்தைத் தமிழ் வேதமாகச் செய்து ஓதிப் பரப்பிய ஆசாரியரான நாதமுனிகளின் சிஷ்யர். நாத முனிகளின் அத்யந்த சீடரான உய்யகொண் டாருக்குத் தொண்டு செய்து வந்தவர். குருவின் இரு பெண் குழந்தைகளுக்குத் தாயில்லை. அவர்களுக்குத் தாயாய் விளங்கி வளர்த்தவர். ஒரு சமயம் இந்தக் குழந்தைகளை நீராட அழைத்துச் சென்று திரும்பி வரும்போது ஒரு கால்வாயைத் தாண்டத் தயங்கி பயந்து நிற்கவே, தாம் குறுக்கே விழுந்து படுத்து, தமது முதுகின் மேல் அந்தக் குழந்தைகள் நடந்து செல்லும்படி செய்தார். மணலில் கால்படாமல் குழந்தைகள் நடந்த இடம் 'மணற்கால்' என்று பெயர் பெற்றது. எம்பெருமானார் ராமானுஜர் போற்றி வணங்கிய ஆளவந்தாருக்கு குருவாக விளங் கிய மணக்கால் நம்பி வாழ்ந் திருந்ததால் பெருமை பெற் றது மணக்கால்.





திருச்சியிலிருந்து அரை மணி நேரம் பேருந்துப் பயணம். காவிரி நதியில் சேரும் சிற்றாறுகள் பாயும் வளமான பிரதேசத்தில் அமைந்துள்ள பல கிராமங் களுள் ஒன்று மணக்கால். இன்னிசைப் பிரியர்களும் வேத விற்பன்னர்களும் வாழ்ந்து வளப்படுத்திய கிராமம்.

சங்கீத கலாநிதி எம்.எஸ். அவர்கள் இந்த ஊர் மாட்டுப் பெண். மிருத்யுஞ்சய ஐயர், தியாகராஜ ஐயர் என்ற பெயர் பெற்ற சகோதரர்களில், தம்பி தியாகராஜ ஐயரு டைய திருப்புதல்வர் கல்கி சதாசிவம் அவர்கள் பிறந்த ஊர் மணக்கால்.

மணக்கால் கந்தசாமி ஐயர், மணக்கால் கணேச ஐயர், மணக்கால் சிவராமன், சிவராஜ ஐயர், நடராஜ ஐயர், மணக்கால் ரங்கராஜன் போன்றோரால் இவ்வூர் பெரு மையுற்றுள்ளது.

*- அருள் மணக்கும் திருத்தலங்கள்*
*(வானதி பதிப்பக வெளியீடு)*
**நூலில் - ஆனந்தி**

இன்று, மணக்கால் ஸ்ரீ ஸப்தமாதா சாரிடபிள் டிரஸ்ட் அமைக்கப்பட்ட, இவ்வூரில் உள்ள வரதராஜ பெருமாள் கோயில், மணக்கால் நங்கை (இவள் திருச்சி மாவட்டத்தில் அனே கம் பேருக்குக் குலதெய்வம்) கோயில், ஸ்ரீ கைலாஸநாதர் கோயில், ஸ்ரீ சுப்ரமண்ய சுவாமி கோயில் ஆகியவற்றுக்குக் கும்பாபி ஷேகம் நடைபெறவுள்ளது.

காணிக்கை அனுப்ப விரும்புவோர் காசோலை அல்லது டிமாண்ட் டிராஃப்ட்டில் ''மணக்கால் ஸ்ரீ சப்தமாதா சாரிடபிள் டிரஸ்ட்'' payable at Lalgudi C.C.A/c No:112, இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, லால்குடி, எனக் குறிப்பிட்டு அனுப்பலாம்.

தொலைபேசி: 0431 - 2544011 / 97898 87805 / 9789360704 / 94428 17191.

email:manakkalnambi@gmail.com

**- சாயா**

● பார்கவி, டெல்லி

***உங்களைப் பொறுத்த வரையில் எது 'பிரசாதம்'?***

சினிமா, நாடகத்தில் சம்பாதிப்பதோடு ஒப்பிடுகையில், பத்திரிகைகளுக்கு எழுதி வரும் சன்மானம், கம்மியாக இருந்தாலும் அது ஆத்மதிருப்தியைத் தரும் ஆண்டவனின் பிரசாதம் போல Pressசாதம்!

● 'குலசை' க.மீ.நஜ்முதீன், காயல்பட்டினம்

***'கொடாக்-கண்டன்' 'விடாக்-கண்டன்' என்றால் யார்..?***

உயிரைக் 'கொடாக்-கண்டன்' மார்க்கண்டேயன், உயிரை வாங்காமல் 'விடாக் கண்டன்' எமன். 'கொடாக்-கண்டனை' விட்டுக் கொடுக்காமல், 'விடாக்-கண்டனின்' உயிரை வாங்கியவன் 'விடக்-கண்டன்' திருநீலகண்டன்.

● ஆர். கோபாலன், மேற்கு மாம்பலம்

***மனைவி 'ஹோம்-மேக்கர்' என்றால் கணவன்...?***

வேடிக்கை பார்க்கும் 'வாட்ச்-மேன்'!

● ரா.பிரசன்னா, மதுரை

# கேர்ள் ப்ரெண்ட்

***மூக்கும் முழியுமா மட்டும் இருந்தா எப்படி சார் அழகா இருக்க முடியும்?***

கிட்ட வாங்க. காதும் காதும் வச்சா மாதிரி சொல்றேன். உங்களுக்கு வாய் ரொம்ப ஜாஸ்தி!

● ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி

***கிரேஸி தாங்கள் மூக்கு முட்டச் சாப்பிடும் ஐட்டம் எது?***

தண்ணீர். தாகத்தில் அவசரமாகக் குடிக்கும்போது தம்ளரில் உள்ள தண்ணீர் தளும்பி மூக்கை முட்டும். குட்றார்றா மூக்கு முட்ட மூக்கு முட்ட....

● என்.கோமதி, நெல்லை

***மழை பெய்தால் நாய்க்கு குடை பிடிக்கத் தெரியாது. அப்புறம் 'நாய்க் குடை' என்ற பெயர் எதனால் வந்தது..?***

இரவில் வேரை நீட்டி அக்கடா என்று படுக்கத் தெரியாது. அம்போ என்று நிற்கும் மரத்துக்கு 'தூங்குமூஞ்சி' மரம் என்ற பெயர் எதனால் வந்தது!

● வைஜயந்தி, தஞ்சை

# Vs வொய்ஃப்

● ஜே.துரைராஜ், சென்னை

**சாப்பாட்டு விஷயத்தில் தாங்கள் ரொம்ப 'கான்ஷியஸா...?'**

பார்த்தால் பசி தீரும் அளவுக்கு கம்மியாகத் தான் சாப்பிடுவேன். யானைப் பசியாக இருந்தாலும் சோளப் பொரி அளவு தான் சாப்பிடுவேன். 'பாப்-கார்ன்'ஷியஸ்.

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்

**எதைத் திருடினால் தப்பில்லை...?**

இரும்பு... அதுவே சொல்கிறதே 'ஸ்டீல்' என்று...!

● வாசுதேவன், அயிரோலி

**அந்தக் காலத்தில் அரசர்கள் ஹாலி-டேஸை எப்படிக் கொண்டாடியிருப்பார்கள்...?**

கோயில் கட்டுவது, குளம் வெட்டுவது என Holy-dayக்களாகக் கொண்டாடினார்கள்.

**நாடகம் தெரியும்... அது என்ன கபட நாடகம்..?**

மேக்கப் போட்டுக் கொண்டு நடிப்பது நாடகம். எதையாவது make-up பண்ணி நடிப்பது கபட-நாடகம்.

● ரமணன், வேலூர்

**Girl-friendக்கும், wife-க்கும் என்ன வேறுபாடு...?**

வீதி வரை Girl Friend... வீடு வரை Wife.



## கிரேஸியைக் கேளுங்கள்




# பஞ்சாப்பைக் கலக்கும் டேராக்கள்!

ஒரு சிறு விஷயமானாலும் நெருப்பில்லாமலே பற்றிக் கொள்ளும் மாநிலம் பஞ்சாப். ஐரோப்பாவிலுள்ள ஆஸ்திரியா நாட்டின் தலைநகரான வியன்னாவில் இரு சீக்கியக் குழுக்களுக்கிடையே ஏற்பட்ட மோதலின் எதிரொலி பஞ்சாப்பில் வன்முறையைக் கிளப்பிவிட்டது. இதன் பின்னணி என்ன?

சீக்கிய மதத்தை ஸ்தாபித்தவர் குருநானக். இவர்தான் முதல் குரு. பத்தாவது குரு, குருகோவிந்த் சிங். சீக்கிய வழக்கப்படி இந்த பத்து குருமார்களையடுத்து வேறெந்த குருமாரும் கிடையாது.

பதினைந்தாம் நூற்றாண்டுகளில் ஆங்காங்கே சில சீக்கிய குருமார்கள் தோன்றினார்கள். இவர்களுள் குரு ரவிதாஸ் என்பவரும் ஒருவர். இவரின் பெயரில் எழுபது வருடங்களுக்கு முன்பு பாலன் என்ற கிராமத்தில் தோன்றியதுதான் 'டேரா குரு ரவிதாஸ் சட்கண்டு பாலன்' என்ற அமைப்பு. இதன் தற்போதைய தலைவர் சந்த் நிரஞ்சன் தாஸ். 'டேரா' என்றால் சிறு சிறு சீக்கிய மதக் குழுக்களின் அமைப்பு.

கிட்டத்தட்ட முன்னூறுக்கும் மேற்பட்ட டேராக்கள் பஞ்சாப்பில் உண்டு. குறிப்பாக குரு ரவிதாஸ் டேராவில் தாழ்த்தப்பட்டவர்கள் அதிகம். இவர்கள் ரவிதாஸை 'குரு' என்று சொல்வதும் ஃபோட்டோவை வைத்து வணங்குவதும் சீக்கிய அடிப்படைவாதிகளுக்கு படு எரிச்சலைக் கிளப்பிவிட்டிருக்கிறது. சந்த் நிரஞ்சன்தாஸ் வியன்னாவில் ஒரு குருத்துவாராவில் தாக்கப்பட்டதற்கு இந்த எரிச்சலே காரணம். டேராவின் துணைத் தலைவர் சந்த் ராம்சந்த், இத்தாக்குதலில் மரணமடைந்துவிட்டார். எனவேதான் பஞ்சாப் பற்றி எரிகிறது.

இந்த டேராக்கள் மதத்தை அழித்துவிடுவார்களோ என்று கவலைப்படுகிறார்கள் அடிப்படைவாதிகள். இந்த டேராக்கள் உருவாக மற்றொரு முக்கியக் காரணம், சீக்கிய மதத்தின் தாழ்த்தப்பட்டவர்கள், குருத்துவாராக்களின் நிர்வாகத்தில் பங்கெடுத்துக் கொள்ள அனுமதிக்கப்படாதது தான். குருத்துவாராக்களில் பணப் புழக்கம் அதிகம் என்பதால் தாழ்த்தப்பட்டவர்களுக்கும் மேல்தட்டு சீக்கியர்களுக்கும் பெரிய இடைவெளி ஏற்பட்டுவிடுகிறது. இதைச் சரிசெய்யாதவரை, பஞ்சாப்பில் அவ்வப்போது கலவரங்கள் நடந்துகொண்டிருக்கும் என்பது சமூக ஆய்வாளர்களின் கருத்து.

சமூக ஏற்றத்தாழ்வை ஒழிக்க உருவான சீக்கிய மதம், அதிலேயே சிக்குண்டு அடிக்கடி சர்ச்சைக்குள்ளாவது முரண்பாடு தானே!

- கௌசி


சுகந்தி


ஸ்ரீதரன்




நாராயணராவ்

# என்னிடமிருந்து மகன்களுக்கு...

(இந்த வாரம் ஒரு வாசகரிடம் 'நச்' கேள்வியும் 'நறுக்' பதில்களும்...)

**பெயர் :** சிம்மவாஹினி, திருமதி சுகந்தி நாராயணராவ் என பன்னிரண்டு புனைபெயர்களில் எழுதும் நாராயணராவ்

**இடம் :** வடசென்னையில் வியாசர்பாடியில் வியாசர் நகர்

**கல்கி படிப்பது :** 1962லிருந்து இன்று வரை.

**பிடித்தது :** 'நீங்கள் கேட்டவை'யும் 'கிரேஸி' பதில்களும், இப்போதைய கல்கியின் மாற்றங்களும்.

**பிடிக்காதது :** எதையும் புறக் கணிப்பதில்லை. ஆயினும் நல்ல படத்துக்கு மட்டும் திரை விமர்சனம் போடலாமே.

**இன்னும் கல்கியில் எதிர் பார்ப்பது :** வாசகர்களுக்கான தொடர் போட்டிகளும், சினிமா பகுதியும், வாசகர் பங்களிப்பும்.

**பிடித்த ஓவியர் :** கலைக்கு 'கோபுலு' வும், கவர்ச்சிக்கு 'ஜெ'வும்

**எந்தப் பகுதி புத்தகமாய் வரலாம்? :** கிரேஸி பதில்கள்

**மேலட்டை பற்றி :** நிறைய எழுத்துக் கள் வேண்டாம். படம் மட்டும் ஈர்ப்போடு பெரிதாக இருந்தால் நன்றாயிருக்கும்.

**மகன்களுக்கு கல்கியில் பிடித்தது :** சினிமா பேட்டிகளும், ஜோக்ஸ் மற்றும் ஜஸ்ட் டைம் பாஸ் நியூஸ"ும்

**மனைவிக்குப் பிடித்தது :** டி.வி. தொடர் மாதிரி ஆவலை அள்ளித் தரும் தொடர் கதைகள் மட்டுமே.

**கல்கியைப் பற்றி பிறரிடம் :** என் தெரு நண்பர்களிடம் சொன்னேன்... ''நீ யாருக் காவது வோட்டு போடு. அதற்கு முன்னர் ஒரு முறை கல்கி தலையங்கத்தைப் படித்து விட்டு போ. அது போதும்.''

**ஒரு யோசனை :** மாவட்டம்தோறும் வாசகர்கள் சந்திப்பும் வாசக ஆரம்ப எழுத்தாளர்களுக்கு கதைப் பயிற்சி முகாம் அளித்தலும் வைத்தால் வித்தியாசமாயும் ஆக்கப்பூர்வமாயும் இருக்குமே!

**கல்கியின் பாதையில் உங்கள் பெருமை :** கல்கி என்னிடமிருந்து மகன் களுக்குப் பயணப்பட்டு இருப்பது.

- செய்திச் சித்திரம் : **ரெவின்**

''கும்மி மார்க்கா, கவலை வேண் டாம்'' சிந்திக்க வைக்கும் கட்டுரை. மாண வர்களின் கவலையைப் போக்கும் உற்சாக டானிக்.

**- வி. உஷா சுதர்சன், திருச்செங்கோடு.**

விஜயகாந்தின் வளர்ச்சி அபாரமானது தான், ஆனால் ஆபத்தானது. அரசுக்கு எதி ரான வோட்டுக்கள் சிதறி, மக்களுக்கு விருப்பமில்லாத அரசு அமைய வழி வகை செய்துவிடும். இது தமிழக நலனுக்கு நல்லதல்ல.

**-ஆர். நாகராஜன், சென்னை-117**

சோனியா காந்தியைப் பற்றி பாரதி ராஜாவின் பேச்சு குறித்த கேள்விக்கு தராசு அளித்த பதில் மிகச் சரியான குட்டு!

**-த.சத்தியநாராயணன், அயன்புரம்**

தோல்வியின் ஆகுவாசம் கதை நாயகி சித்ரா தாவணியில் இருப்பதாகக் கதையில் வருகிறது. ஆனால் ஓவியர் ஸ்யாம் அவ ளுக்கு சுடிதார் அணிவித்திருக்கிறாரே!

**-அ.கு.கிருஷ்ணன், புதுச்சேரி-4**

கல்கியைப் பிரித்தவுடன் அருள்வாக் கைக் காணுமாறு போடுங்கள். அட்ட வணையை அடுத்த பக்கங்களில் போட்டுக் கொள்ளலாம்.

**- தி.ரங்கசாமி, திருச்சி.**

எழுத்து எக்ஸ்பிரஸ்ஸில், ''புத்தகம் வாங்கிப் படிப்பவர் எண்ணிக்கை வேறு எந்த மாநிலத்திலும் இல்லாத அளவுக்குத் தமிழ்நாட்டில் அதிகரித்திருக்கிறது'' என்று வாஸந்தி (புதிய யுக்தி.. புதிய ரசனை!) சொல்லியிருக்கும் செய்தி உண்மை யிலேயே மகிழ்ச்சியை அளிக்கிறது.

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**

''ராஜாதி ராஜா'' படத்தின் விமர் சனத்தை அக்குவேறு ஆணிவேறாக பிரிச்சு மேய்ஞ்சுட்டீங்க!

**- எம்.கே. அருள்ராஜா, முனியங்குறிச்சி**

## பிரிச்சு



எவ்வித எதிர்காலத் திட்டமு மில்லாமல் மூர்க்கத்தனமாகச் செயல்பட்ட தலைவரின் முட்டாள் தனத்தால் ஈழத்தில் முடிந்தது ஒரு சகாப்தம் அல்ல; ஒரு சந்ததி. அழிந் தது ஒரு இயக்கமல்ல, ஒரு இனம்.

**-அ.யாழினி பர்வதம், சென்னை-78**

இயற்கையோடு ஒன் றிப் போக இறையன்பு சொன்ன, 'நாமே மலராகும்' தத்துவம் புதுமை!

**- உமா மோகன்தாஸ், திண்டுக்கல்-1**

'வாக்காளர்களின் தொலைநோக்கு'

# வட்டமேஜை

தலையங்கத்தின் மூலம், அமையப் போகும் புதிய அரசுக்கு கல்கி வழங்கி யிருந்த 'ஆலோசனை+அட்வைஸ்' அசத்தல் சாரே!

-ஆர். ராம்சுப்ரமணி, திருவாரூர்

வட்டமேஜை பகுதியில் பிரசுரமா கும் கடிதங்களில் சிறந்த கடிதத்துக்குப் பரிசு தரலாமே! செய்வீர்களா?

- அ.முரளீதரன், மதுரை-3

பாண்டிச்சேரி ஓவியர் கண்ணனின் ஓவியங்கள் அனைத்தும் அசல் போலவே இருந்தன. அவருக்கு உண்டு எதிர்காலம்!

-பி.கோவிந்தசாமி, ஊத்தங்கரை



# மேய்ஞ்சுட்டீங்க!

கவின்கவியின் 'புல்லாங்குழலின் காற்றுச் சுருதியால் மன்னிக்கப்படுகிறது புயலின் கர்வம்' கவிதைக் கீற்று அற்புதம்.

- பா.அச்சுதன், வயலூர்

நல்ல இலக்கியம் சமூகத்தைக் கால் இன்ச்சாவது முன் நகர்த்தும் என்பார்கள். அமிர்தம் சூர்யாவின் 'தவணை முறை தற்கொலை' நம்மை எல்லைகள் தாண்டி முன்னே இழுக்கிறது.

-எஸ்.கார்த்திகேயன், திருப்பூர்

'கந்தசாமி' படத்துக்காக விக்ரம் போட்டிருக்கும் பெண் வேஷம் சகிக்கலை! கந்தசாமியைப் பார்த்து நொந்தசாமியாகிப் போனேன்.

- எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

அட்டையில் ஒரு பொருளடக்கம்; முதல் பக்கத்தில் ஒரு பொருளடக்கமா? 'ஜில் ஸ்பெஷலில் நீங்கள் படித்தவை' என்று கடைசிப் பக்கத்திலும் ஒரு பொருளடக்கத்தைப் போட்டிருக்கலாமே!

- கவிஞர் அய்யாறு
எஸ்.வாசுதேவன், சென்னை-14

இலங்கையைப் பார்த்தவன், இலங்கை வானொலியைக் கேட்டவன், இலங்கைத் தமிழ் இனிய நண்பர்களைப் பெற்றவன் என்ற முறையில் சொல்கிறேன். இலங்கைப் பிரச்னையில் அன்று முதல் இன்று வரை நிலையான கருத்து தெரிவித்து வருவதில் 'கல்கி'க்கே முதல் இடம். உரிமைகளுக்காக ஜனநாயக முறையில் போராடுவது நிச்சயம் ஒருநாள் வெற்றியைத் தேடித் தரும்.

- ந.சுந்தரராஜ், சென்னை-61

**தா**ன் உயிருக்குயிராய் நேசித்த காதலியின் இதயத்தைக் காக்கப் போராடும் இளைஞனின் கதைதான். அதைச் சொல்ல வரும் விதத்தில், அதாவது திரைக்கதையில் கோட்டை விட்டிருக்கிறார் இயக்குநர் விஷ்ணுவர்தன்.

படத்தில் கொஞ்சம் ரிலாக்ஸ்டாக நம்மை உட்கார வைக்கும் இடம் ஆர்யாவும், த்ரிஷாவும் சந்தித்துக் கொள்ளும் காதல் காட்சிகள். இவர்கள் பார்க்கும்போதெல்லாம் பின்னணியில் இளையராஜாவின் பழைய பாடல் ட்யூன் போடுவது அழகு. [தெரிஞ்சுதான் போட்டாங்களா? ரசிகர்களுக்குத் தெரியாதுன்னு நினைச்சுப் போட்டாங்களா?]

படத்தின் மிகப்பெரிய பலமே நீரவ்ஷாவின் மென்மையான ஒளிப்பதிவும் அனுவர்தனின் உடை வடிவமைப்பும்தான். படத்தில் நம்மைப் பயமுறுத்துவது 'ராட்வைலர்' என்னும் போர் வகை நாய். இது ஒரு கதாபாத்திரமாகவே வருகிறது. எட்டு வயதுச் சிறுவனான ரோஹனின் நடிப்பு பரவாயில்லை. மூணாறில் பங்களா ஒன்றில் இரவு நடக்கும் சண்டைக் காட்சி திகில். ஸ்டண்ட் மாஸ்டரை மனம் திறந்து பாராட்டலாம். யதார்த்தமான சித்திரிப்பு.



# சர்வம்

தனது எட்டு வயது மகனையும், மனைவியையும் இழந்த ஒருவனின் கொலை வெறியை மட்டுமே காட்டும் இயக்குநர், அவனுக்கு தனது குடும்பம் மீதான ஆழமான காதலை அழுத்தமாகச் சொல்லாமல் விட்டிருப்பது சொதப்பல். மாஞ்சா கயிறில் மாட்டி உயிர் போகுமா? தனது தவறை ஒப்புக் கொண்டு மனம் திருந்தியும் ஒருவன் அவனைக் கொல்ல முயல்வானா? விஷம் தடவிய கத்தியால் குத்துப்பட்டும் ஒருவன் உயிர் பிழைப்பானா? கேள்விகள் எழுந்து கொண்டேயிருக்கின்றன... சர்வம் அஜாக்கிரதை!

- கிராபியென் ப்ளாக்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.

தாய்க்கு மேல் இங்கே ஓர் தெய்வமுண்டோ?
தாய் பெண்ணே அல்லவோ? தமக்கை, தங்கை
வாய்க்கும் பெண் மகவெல்லாம் பெண்ணே அன்றோ!
—மகாகவி பாரதியார்

# Oil pulling

Very Simple...
Very Effective...

பெண்ணின் பெருமையை பெருமிதத்துடன் போற்றிப் பாடிய பாரதியின் பேராற்றலை மனதில் கொண்டு பெண்களின் நலன் கருதி இல்லம் தேடி வரும் இதயம் வெல்த்.

கீழ்க்கண்ட கூப்பனை பூர்த்தி செய்து, அத்துடன் **V.V.V & SONS EDIBLE OILS LTD.,** என்ற பெயருக்கு **Cheque** அல்லது **D.D** எடுத்து அனுப்பி வைக்கவும். அனுப்பி வைத்தால் சலுகை விலையில் உங்களுக்கு இதயம் வெல்த் அனுப்பி வைக்கப்படும். இந்த அரிய சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

FROM THE HOUSE OF



**IDHAYAM**

| குறியிடுக ✓ | காலம் | மாதம் ஒருமுறை இதயம் வெல்த் 30 X 10ml | இதயம் வெல்த் மற்றும் கொரியர் கட்டணம் | நீங்கள் செலுத்துவது | நீங்கள் சேமிப்பது |
|---|---|---|---|---|---|
| ☐ | 1 வருடம் | 12 மாதம் X 30 பாக்கெட் | அதிகபட்ச விலை Rs . 840 | சலுகை விலை Rs. 360 | Rs. 480 |
| ☐ | 6 மாதம் | 6 மாதம் X 30 பாக்கெட் | அதிகபட்ச விலை Rs. 420 | சலுகை விலை Rs. 180 | Rs. 240 |

இத்துடன் ரூபாய்------------க்குரிய ------------ Bank -ன் ------------
தேதியிட்ட Cheque / D.D No. ------------------------ அனுப்பியுள்ளேன்.

பெயர் : ------------------------

முகவரி : ------------------------

------------------------

------------------------

தொலைபேசி எண் : ------------------------

கையெழுத்து: ------------------------

**அனுப்ப வேண்டிய முகவரி**

V.V.V & SONS EDIBLE OILS LTD.,
443, Bazaar, Virudhunagar – 626 001
E-mail: threevee@idhayam.com | Mobile: 98410 42366